*Ten̲r̲al*

*Malar 1, ital̲ 43*

*April 23, 1955*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர் : கண்ணதாசன்

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணு. | வெளிநாடு மூன்றணு அலுவலகம்: 'தென்றல்' சென்னை-6

| மலர் 1 | சென்னை | 23—4—1955 | சனிக்கிழமை | இதழ் 43 |
|---|---|---|---|---|

சிங்க உள்ளத்தினரின் மாட்சி கூறும் சங்கத்தமிழ்ச் சுவடிகள் விரிந்து கிடந்தன. அந்தப் புரத்தின் வட்ட நீர்ச்சுனையில் வெள்ளைவாத்துக்கள் நீந்தி மகிழ்வதை யுவராணி நிர்மலா கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக்கி இன்புற்றிருந்தாள். மயக்கம் தரும் மலர் வாடை - மான்விழி நிகர்த்த மதுர கீதவாணிகள் எழுப்பும் இன்ப கீதத்தையும் மிஞ்சிடக் கூடிய வண்டுகளின் ரீங்காரம்! சுகபோதை யேறிப்போன இளவரசி நிர்மலாவின் அந்த சுந்தரவன மாளிகை தொட்டில் குழந்தையாகக் கிடந்தது. ஜோடி, ஜோடியாக கூடுநோக்கிப் பறந்துசென்ற பச்சைக்கிளியினம், அந்த இளமாதின் உள்ளத்தில் 'இச்சைக்குரியவர் இன்னும் வரக்காணேமே' என்ற ஏக்கத்திற்கு விதை தூவிக் கொண்டு மறைந்தன.

ஏதோ ஓசை! மர்ம ஓசை!

விசைக்கதவுகள் திறக்கப்பட்டன. தோழிப்பெண் தோகைமயிலைக் கண்டதும், இதுவரை எங்கோ ஒளிந்திருந்த இன்பக்களை இளங்கொடி நிர்மலாவின் மலர்முகத்தை சுற்றி வளைத்துக்கொண்டது.

"தோகை! வந்துவிட்டாரா?"

"வந்திருக்கிருர்! ஆனல் அவரல்ல; எவரோ ஒரு ஏகாந்தி வந்திருக்கிருர்! இலக்கியக் கழகம் பற்றி தங்களிடம் பேசவேண்டுமாம்!" என்ருள் தோகைமயில்.

ஏந்திழை நிர்மலா ஏமாற்றத்தின் செல்லப்பிள்ளையாளுள். துக்கமும், ஏக்கமும் அவளின் முகப்பொலிவை எள்ளி நகையாடின. இலக்கியம் வளரவேண்டும் என்ற ஆசையும் உண்டு அவளுக்கு! ஆனல் இதயம் கவர்ந்தவன் வரப்போகும் வேளை அது! முகம் சிவந்தது. விழி பிதுங்கிக்கொண்டு வெளியே வர அனுமதி கேட்டுக் கொண்டிருந்தன. பாவம்! வேண்டா வெறுப்பாக அவரை வரச்சொல் என்று தோகையிடம் சொல்லி அனுப்பினுள்.

முதுமைக்கோலத்தை தன்மீது படிந்திருக்கும் பழுப்பு நிறத்தால் உணர்த்திக்காட்டும் எட்டுச்சுவடிகளை ஏந்திய வண்ணம், தாடிமீசையுடன் கூடிய நடுத்தர வயதினர் ஒருவர் பின்னே வர தோகை மயில் அவருக்கு வழிகாட்டி வந்தாள்.

"வணக்கம் தேவி!"

"வருக!"

"இலக்கிய வளர்ச்சிக்கழகத்தின் சார்பாக தங்களைக் காண வந்திருக்கிறேன். அரச வம்சத்தினர் ஆக்கமும் ஊக்கமும் தந்துதவினல் இலக்கிய அன்னைக்கு மகுடம் சூட்டி வைத்துவிட முடியுமென்ற நம்பிக்கை எனக்கு மிக உண்டு தேவியாரே!"

"மகிழ்ச்சி! இலக்கிய வளர்ச்சிக்கு இயன்றன செய்ய நான் கடமைப்பட்டிருக்கிறேன். மொழி வளர்ச்சி நாட்டுவளத்திற்கு உயிர் நாடி என்ற கருத்துடையவள் நான். பெரியவரே, பிறிதொருமுறை வாரும். ஏற்றன செய்து கௌரவிப்போம்" என்று கூறிவிட்டு தோகையைப் பார்த்தாள். குறிப்பறிந்த அந்தக் குறும்புக்காரி சுவைநீர் கொண்டுவரச் சென்ருள்.

"ராஜகுமாரி!"

"சுவைநீர் அருந்திச் செல்லலாம் பெரியவரே!"

பெரியவர் பெருமூச்சு விட்டார். அவருடைய பார்வையிலே பிரேமை வழிந்திருந்தது.

"ஏன் ஒரு மாதிரியாகப் பார்க்கிறீர்? உடல்நலக்குறைவோ?"

"அல்ல மாதரசி! உள்ளக் கடலிலே ஆசை அலைகள் அடுக்கடுக்காகக் கிளம்பிவிட்டன பெண் மானே!"

"பெரியவரே!" அதட்டிப் பேசினுள் நிர்மலா.

"தாடியையும், மீசையையும் கண்டதும் தள்ளாத வயதினனென்று எண்ணிவிட்டாய்! அப்படித்தானே!"

"இலக்கியப் பித்தனென்றீர், தாய்மொழியின் காவலனென்றீர், இப்போது தடுமாறுகிறீரே ஏன்? மூளைக் குழப்பமா அல்லது மோகினிப்பிசாசா?"

"நிர்மலா!"

"மூடு வாயை! ஓடிப்போ மாளிகையை விட்டு! காவலர் கண்டால் கைகளிலே விலங்கிட்டு கடைத் தெருவே இழுத்துப்போவார்கள்! இலக்கியத்துமீதுள்ள பற்றினுல் உன்னை இதோடு விட்டுவைக்கிறேன். இஃம்! போய்விடு!"

"ஏட்டையும் என்னையும் பார்த்தவுடன், கவி பாடிப் பிழைக்கும் புலவனென்று எண்ணிவிட்டாய்! பேதைப் பெண்ணே, புவியாளும் மன்னன் என் பிடியில்! ஏழைக் கவிஞனுமல்ல, எழுதிப் பிழைப் போனுமல்ல!"

"பைத்தியம்! யாரங்கே!" வெண்கல மணியைத் தட்டினுள். தோகை ஓடிவந்தாள். "தோகை! நில் அப்படியே!" என்றுவாளைக் காட்டி மிரட்டி அவளைத்துரத்திவிட்டான் தாடிக்காரன்.

"தாடிக்காரா! ஓடிப்பிழைக்கிருயா? தேடிப்போய்சாவைப் பிடிக்களண்ணமா?"

"தாடிக்காரன் தான் தங்கப் பதுமையே! ஆனல் அந்தத்தாடி ஆடிப்பாடி, அழகு சிந்தி, என் அங்கமெல்லாம் ஆசையைப் பொங்கவைத்த பவழமேனியாளை - பால் வண்ணச்சிலையை பார்த்தபின்பு இனி வேண்டாம்! இதோ பார்!" என்று கூறி தான் பூண்டிருந்த வேடத்தைக் கலைத்தான் அந்த அந்நியஉருவில் வந்தவன். நிர்மலா திடுக்கிட்டாள். தாடி வேடத்துடன் வந்தவர் தன் தந்தையின் வலக்கரமாக விளங்குகின்ற கன்னிநாட்டின் முதலமைச்சர் பூதேவர் என்பதை அப்போதுதான் நிர்மலா புரிந்து கொண்டாள்.

"பூ தேவர்!"

"ஆம்; பூதேவர்தான்! இன்று பூவையைத் தேடி புதுவேடம்தாங்கி வந்திருக்கிறேன். நிர்மலா, நீண்ட நாளைய எனது எண்ணத்திற்கு இன்று நீ முற்றுப்புள்ளி வைப்பாயென நினைக்கிறேன் பொற்கொடியே"

"அமைச்சரே, நல்லறம் வளர்க்கும் பரம்பரையைச் சேர்ந்த நீங்களா, நீசத்தனத்திற்கு முன்னோடியாக இருப்பது! தகாது மந்திரியாரே; தந்தையின் செவிக்கெட்டினுல் உம் தலையும் தப்பாது! தப்பவே தப்பாது!"

"நிர்மலா, இந்தப் பூதேவன் மனம் வைத்துவிட்டால், மூதேவர் வந்தாலும் மாற்றமுடியாது! நில்லா விருக்கட்டும்! வா! என் பக்கம் வா! கன்னிநாட்டின் வாழ்வையும், தாழ்வையும் கையிலே சுழற்றிக் கொண்டிருக்கும் தலைமை அமைச்சர் கேட்கிறேன்; வேண்டி நிற்கிறேன்; உனது அழகுடலை என்னிடம் ஒப்படைத்துவிடு!" என்று பேசிக் கொண்டே நிர்மலாவின் கையைப் பற்றினுர் பூதேவர். நிர்மலா கதறினுள். "பூதேவரே, நாளை ராஜசபையில் தலைகவிழ்ந்து நிற்கப் போகிறீர்! தூக்குக்கயிற்றின் நாக்கைத் தொட்டுப்பார்க்காதீர்கள்" என்று கடிந்துரைத்தாள்.

பூதேவரின் கண்கள் சிவந்த[...] நிர்மலாவை சுவற்ருேடு சாய்த்த[...]

"நிர்மலா, பூதேவன், ஆ[...] மில்லாமல் தலையிடமாட்ட[...] இந்த மர்மக்கதையை மன்ன[...] காதில் போட்டால், உன்னைச் சிரிக்க வைத்து விடுவேன். பதிக்கு நீ எழுதிய காதல் [...] களையும், நேற்று அ[...] அனுப்பிய தங்கக்கட்[...] மன்னர் முன்சமர்ப்பித்து[...] ஜாக்கிரதை" என்று [...] கொண்டே இடக்கையா[...] மலாவை இறுகத் தழு[...] வலக்கரத்தால் அட்டைப்[...] வைத்திருந்த நிர்மலாவின் கடிதங்களை எடுத்துக் கா[...] தான்.

பாவையின் முகம் சோர்[...] ஆனுலும் பூதேவரின் மிருகத்திற்கு தலைசாய்த்துவிட[...] நிர்மலா.

அப்போது மாளிகைக்குள் க[...] ஓசை கேட்டது. பூதேவரின் கண்[...] வாயில் கதவுகளை நோக்கின. [...] மிக்கொண்டே உள்ளே [...] தளபதி திருமேனி இந்தக் [...] யைக் கண்டதும் வந்த [...] திரும்பிக்கொண்டிருந்த



மேனியின் நடையிலே புதுமிடுக்கிருந்தது. அதே நேரத்தில் பூதேவரின் முகத்திலே புகை சூழ்ந்தது. பிடிதளர்ந்தது. அரக்கனின் பிடியிலே சிக்கித் தவித்த அந்த அபலையின் கண்களுக்கு திருமேனி வந்து போனது எப்படித் தெரியப்போகிறது.

"நிர்மலா! சிந்தித்து ஒரு முடிவுக்கு வா! உனது காதல் கடிதங்களும், கட்டி, கட்டியாக நீ அனுப்பிய தங்கமும் என்னிடம் தான் சிக்கியிருக்கின்றன என் பதையும் மறந்துவிடாதே" என்று எச்சரித்துவிட்டு பூதேவர் மாளிகை அகன்றார். சுனையில் நீந்திக் கொண்டிருந்த வாத்துகள் சிறகடித்த அந்தச் சுனையின் அமைதியைக் கலங்கச் செய்துவிட்டன.

★

மறுநாள் காலை! தளபதி திருமேனியின் உள்ளம், இடிவிழுந்த வீட்டின் மறுநாட் கோலமாக இருந்தது. நிர்மலாவின் நிலை குறித்த வருத்தமும் கன்னிநாட்டு அரசகட்டில் குணங்கெட்ட பிரதமரிடம் அகப்பட்டு விழிக்கும்வேதனையும் திருமேனியின் உள்ளத்தை அரைத்துக்கொண்டிருந்தன. இரும்புப்பெட்டியிலிருந்த காதல் கடிதங்கள் எப்படி பூதேவரின் கைக்குச் சிக்கின? எதிர்கால கன்னிநாட்டின் நலத்திற்கெனச் சேர்த்துவைத்த தங்கக்கட்டிகளை மந்திரி கைப்பற்றிய தெவ்வாறு? என்றசிந்தனைகள் வேறு அவன் நெஞ்சைத் தின்றுகொண்டிருந்தன. களத்திலே கலங்காதவன் தன்னுடைய காதல் கதை வெளிப்பட்டபோது பெரிதும் வருந்தினன்; மன்னனின் மனத்தாங்கலுக்கு இலக்காக நேரிட்டு விட்டதே என அஞ்சினன்.

ஆயுதம் தாங்கிய வீரர் இருவர் திருமேனியின் மாளிகை புகுந்தனர்.

"வேம்பு, என்ன இவ்வளவு வேகமாக வருகிறாய்?" திருமேனி கேட்டான்.

"..................!"

"சிலம்பா, நீயாவது சொல்! வேம்பு ஏன் மௌனம் சாதிக்கிறான்?"

"அரசர் தங்களைக் கைது செய்து வரக்கட்டளை இட்டிருக்கிறார்."-சிலம்பனின் தொண்டை கம்மியது. திருமேனியின்மீது படை வீரர்கள் அவ்வளவு அன்பு செலுத்தி வந்திருக்கிறார்கள்.

★

அரசர் பொழுதுபோக்கும் சலவைக்கல் மண்டபம். மன்னன் முகத்திலே ஈயாடவில்லை. மாற்றுவின் படையெடுப்பின்போதுகூட அடைந்திராத அவ்வளவு ஆத்திரங் கொண்டிருந்தார் அன்று.

"திருமேனி!" உறுமினார் மன்னர்.

"வேந்தே!"

"மாதாவை இழந்து மரத்தடியிலே கிடந்தவனை மார்தட்டிப் பேசவில்லைவத்த அரசுக்கு நீ செய்த கைமாறு என்ன?" திருமேனி பதிலேயம்பசவில்லை.

"திருமேனி! ஏன் விழிக்கிறாய்? நேற்று அந்தி சாய்ந்தபிறகு நீ அந்தப்புரம் புகுந்ததுண்டா?"

"போனேன்!"

"போனாய்! என்ன திமிர்? துரோகி. கூடிக் கழுத்தறுத்தானே!"

தேன். ஆனால் எந்தத் துரோகமும் செய்யவில்லையே நான்!"

"இதயமில்லாதவனேஇன்னுமா உனக்கு வெளிப்படையாகச் சொல்ல வேண்டும்! சகோதர பாசமிருந்தால் நிர்மலாவைச் சருகாக்க உனக்கு மனம் வருமா?!"

"மன்னவா! நிர்மலாவைக் காதலித்தேன்!"

"போதும்! நிறுத்தடா! காதலாம்! காவியம் படிக்கிறான்! போ! சுடுகாட்டுக் கறையான் உன் சதையைக் காதலிக்கிறதாம்! போ! போ! யாரங்கே! இவனைப் பிணமாக்கித் தலையைமட்டும் கொணர்ந்து அரசவையில் வையுங்கள். பலவந்தப் புணர்ச்சி செய்யும் காமாந்தகர்களுக்குப் பாடமாக இருக்கட்டும்! நிர்மலா! நிர்மலா! பூதேவரே! பூதேவரே!" ஆசனத்திலேயேமயக்கமாகச் சாய்ந்துவிட்டார். பூதேவர் அப்போது அங்கில்லை!

திருமேனி கொலைக்களத்திற்கு இழுத்துச் செல்லப்பட்டான். அரண்மனையின் தந்தத் தூண்களிலே

இளம்பரிதி
சென்னை மாவட்டத்தின்
புதிய செயலாளர்.

செதுக்கப்பட்டிருந்த காதலர் சிற்பங்கள் திருமேனியின் இன்பக் கனவுகளை நினைவுக்கு இழுத்துவந்து கொண்டிருந்தன. கற்கோட்டை கடந்தான்-கன்னிநாடு கடந்தான். கள்ளிக்காட்டுக்குள் மறைந்துவிட்டான். எதிரிநாட்டுப் படையினருக்கு விலங்கிட்டு இழுத்துவந்த வீரன் திருமேனியின் கரங்களை சொந்த நாட்டு உலைக்கூடத்திலே செய்யப்பட்ட விலங்குகள் பிணைத்திருந்தன. திரும்பிப் பார்த்தான். ராஜகோட்டை தெரிந்தது!

மலர் வனத்தில் ஒரு நீரூற்றுக்கா வனம். தோகையமயில் முல்லை அரும்புகளை குவித்து படியால் அளந்துகொண்டிருந்தாள். வழக்கமாக மலர்வனத்திற்கு வரும் நிர்மலா அன்று வரவே இல்லை; யாருமே இல்லாத அகண்ட மாளிகையில் இளவரசி என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்று தனக்குத் தானே பலமுறை கேட்டுக் கொண்டாள் தோகைமயில்.

திடீரென்று அந்தப்புரத்தினுள்ளிருந்து ஒரு அபயக்குரல், துப்பாக்கியினின்று கிளம்பும் தோட்டாவைப் போல கிளம்பி வந்து தோகையின் காதில் மோதியது. திடுக்கிட்டு ஓடினாள் தோகை. வளர்த்த பாசம், அவளின் தசையெல்லாம் ஆடியது.

வின் வேதனைக்குரல் ஒரு கண்ணுடி அறைக்குள்ளிருந்து வந்துகொண்டிருந்தது. "ராணி!" பரிதாபத்தோடு கூவினள். தோகை!

"தோகை! ஐயோ தோகை! சிறகொடிந்த பறவையானேன் தோகை! ஓடு ஓடு, மன்னரிடம் சொல்லு! பூ.......பூ.......பூதேவர்! பூதேவர்!" என்று கத்தினள்.

"இதோ போகிறேன்! புறப்பட்டு விட்டேன்! ராணி! ராணி!" என்று கதறிக்கொண்டே தோகை அரண்மனைக்கு ஓடினள். மன்னர் படுத்த படுக்கையாகக் கிடந்தார்.

"இளவரசிக்கு ஆபத்து! ஐயோ! ஐயோ! மன்னவரே! பூதேவர் இளவரசியை கண்ணுடி அறைக்குள் தூக்கிப் போய்விட்டார்! பாவி!" என்று கத்தினள் தோகை.

மன்னர் திடுக்கிட்டு எழுந்து, "தோகை என்ன உளறுகிறாய்?" என்றார்.

"இல்லை! உளறவில்லை! இளவரசியை.........இளவரசியை......" என்று இழுத்தாள்-

"அடி சண்டாளப் பெண்ணே! என்ன சொல்லித் தொலைகிறாய்! சொல்லு!" கோபமாகக் கேட்டார். தோகை நிலைமையை விளக்கினள். மன்னனின் கண்களிலே கோபம்,

பஞ்சவர்ண ஜமுக்காளத்தில் கொள்ளிவைத்து விட்ட என்று கதறிக்கொண்டு வீரர்கள் புடைசூழ அ புகுந்து கண்ணுடி அறை தார். பேணிவளர்த்த நாணிக்கோணித் தலையை நிற்று. மன்னரால் அந் வில்லை. நிர்மலா பிறந் யாக ரத்தத் தடாகத்தில் டிந்தாள். பூதேவர் வாள் பாய்ந்து பிணமாக மன்னர் சிலையாக நின்றார். ஆசைக்காதல் ராஜனை கொள்ள செய்த கு பூதேவர் வென்றார்! என் தின்றார்! அவரின் உயிரை குடித்தது" என்று செ ஒரு துண்டு லிகிதம் காதிக அந்த ரத்தத்தில் மிதந்த நேரத்தில் தளபதி திரும தலையை கொலையாளிகள் னிடம் கொண்டுவந்து கொ கள். சற்று உலர்ந்த குருதி நிறம் அதிகம் கூட்டப்பட்ட மேனியின் தலையை நிம முகத்தருகே வைத்தார் ம

"நிர்மலா! நிர்மலா! மலா!!! ஐயோ, திருமேனி மேனி!!" என்று அ அதுதான் அவரது கடைசி

## பெண்ணுகப் பிறவேனே!

—: தமிழ்ப்பித்தன் :—

பெருமைமிகு திராவிடத்தில் புதுவை மண்ணில்
பிறந்திட்டார் கவியரசர் பாரதி தாசன்
அருமைமிகு கவிதைகளைத் தமிழ்க்கே யன்னர்
அமைத்திடுதல் அனைவருமே அறிந்த உண்மை!
வருங்காலப் பரம்பரையை காட்டி லன்னர்
வகையாகத் தோற்றுவித்தார் அதுதான் பெருமை
பெரும்புலமை கொண்டிட்ட அவரை மணக்க
பெண்ணுகப் பிறவேனே! பெருமை பெறேனே

தமிழ்நாட்டின் தடைகள்தமை நீக்க அன்னர்
தனிக்கவிதை யாத்திடுவர் நாட்டில் யாண்டும்!
அமிழ்தான தமிழ்மொழிபால் அவரின் அன்பை
அறைந்திடவே சொல்லில்லை நீள்நி லத்தில்
இகழ்கின்றார் தமிழ்மொழியை எவரும் என்றால்
எம்கவிஞர் பொறுத்திடவே மாட்டா ரென்றும்!
வாகார்ந்த கவியரசை வதுவை கொள்ள
வனிதையாய்ப் பிறவேனே! வல்லமை கொளேனே

பெண்கட்கே பேருரிமை தருதல் வேண்டும்
பெற்றோரும் பெண்டிர்தமை மதித்தல் வேண்டும்
மண்மீதில் காதல்வாழ் வதனை மக்கள்
வாழ்த்தோடு வளர்த்திடுதல் வேண்டும் நாட்டில்
திண்ணமுடன் தொழிலாளர் தம்மைச் செல்வர்
சுரண்டிவரும் இழிநிலையை ஒழித்தல் வேண்டும்
என்றுசொலும் புரட்சிக்கவி தமை மணக்க
ஏந்திழையாய்ப் பிறவேனே! இன்பமே உறேனே



# எண்ணம்

## கண்ணதாசன்

திராவிடமெங்குமுள்ள கிளைக் கழகங்களனைத்தும் தேர்தல் நடத்தி புதிய செயற்குழுவைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென பிரவரி இறுதியிலே தலைமை நிலைய அறிக்கை பிறந்தது. கொள்கை உறுதியை அஸ்திவாரமாகக் கொண்டு கோபுரமென வளர்ந்துள்ள இயக்கத்தின் காளைகள் இயந்திரமாகப் பணியாற்றத் தொடங்கினர். தொழில் நிமித்தம் அயலூர் சென்றிருந்தோரெல்லாம் வீடு திரும்பி தேர்தல் பணி புரிந்தனர். ஒரே நாள்! அந்த மார்ச் 27-ல் தான் தேர்தல் நடத்த வேண்டுமென்று பொதுச்செயலாளர் ஆணையிட்டிருந்தார். நகரங்களிலே, சிற்றூர் பேரூர்களிலே அத்தனையும் அன்றே தேர்தலை நடத்தி செயல்புரியும் செல்வங்களை தெரிந்தெடுத்து இயக்கத்தின் இருதயமாம் 'அறிவக'த்திற்கு அறிவித்தன. எந்தெந்த ஊரிலே யார், யார் செயற்குழுவின் பட்டியலில் இடம்பெற்றிருக்கின்றனர் என்ற தகவலை, கொள்கை வளர்க்கும் நமது இதழ்களிலே காணும் போது உள்ளம் பூரிக்கிறது-மகிழ்ச்சியால் உடல் சிலிர்க்கிறது. அதைவிட, தேர்தல் நடந்த இடங்களிலெல்லாம் ஜனநாயகத்திற்கு மகுடம்சூட்டி வாழ்த்தினர்கள் தோழர்கள், என்ற இன்பச் சேதியை கேள்வியுறும் போதுதான் நமது இன்பநிலை சிகரம் தொடுகிறது.

கிளைக்கழகச் செயற்குழுவைத் தேர்ந்தெடுத்த இரண்டு கிழமைகளுக்குப்பின் (10, 17) மாவட்டக் கழகச் செயற்குழுவையும், பொதுச் சபைக்கான உறுப்பினர்களையும் தேர்ந்தெடுக்க கட்டளை பிறப்பித்தது தலைமை நிலையம். பொதுக்குழுவில் அங்கமேற்று பணிபுரியத் துடிதுடித்த தொண்டர்களெல்லாம் ஞாயிறுக்கு முன்னெழுந்து கிளைக் கழகப் பிரதிநிதிகளின் வாக்கு சேர்க்கும் இலட்சியப் பணியில் திளைத்திருந்த கதைகளை அவரவர்களின் வாயிலாகவேகேட்கும்போது நமது எண்ணங்களெல்லாம் எதிர்கால அரசியல் புரட்சிக்கான 'மாதிரிப்படங்களை'த் தீட்டுவதிலே தான் ஈடுபடத் துடிக்கின்றன.

இயக்கத்தின் சரிதத்தில் தொடர்ந்து பங்கேற்று பண்பட்ட உள்ளத்தினர், மயக்காதுழைக்கும் மாசற்ற இளைஞர்கள், கொள்கைக் குமரர்கள் அத்தனை வகைப்பட்டோரையுமே தன்னகத்தே கொள்ளும் தகைமைசான்ற பொதுக்குழுவுக்கு ஒவ்வொரு மாவட்டமும்பதின்மரை அனுப்பிவைத்திருக்கிறது. கட்டுக்கோப்பு உண்டா, சட்டதிட்டமுண்டா என்று போகிற போக்கிலே சொல்லிச்சென்று, மனச்சாந்திபெறும் 'பேரிய வீட்டு'க்காரர்களுக்கு கழகத்தின் இந்தப் புதுத் தேர்தல் 'பங்குனிப்பேரிடி'யாகத்தான் இருந்திருக்கும். தூரநின்று நம்மைப் பார்த்தவர்களாக இருந்தால் அவர்கள் ஏமாறட்டும்! தெரிந்தும் உண்மைக்குத் திரையிட்டவர்களாக இருப்பின் அவர்களது மனப்புண் விரிவடையட்டும்!

தலைமைக் கழகத்தின் மூன்றுவது அறிக்கை பிறந்து விட்டது. புதிய பொதுக்குழு சென்னையிலே கூட இருக்கிறது ஏப்ரல் 24ல்! பொதுச் செயலாளரைத் தேர்ந்தெடுக்கும் பொன்னுன வாய்ப்பு-பெருமைக்குரிய சந்தர்ப்பம் சென்னைக்குக் கிடைத்திருக்கிறது. தேர்ந்தெடுக்கப் படப்போகும் பொதுச் செயலாளர் ஆற்றப்போகும் நன்றியுரை, நமை வளர்த்த நம்பாட்டன் நாமம் பெற்ற வண்ணை தியாகராயர் கல்லூரியிலே என்பதை மறந்து விட முடியாது. நம்மையெல்லாம் சிந்திக்கவைத்த அந்த தன்மான தீபச்சுடரின் பெயர் விளங்கும் இல்லத்திலே நமது இலட்சிய நினைவுகளுக்கு முடிவை படுத்த இருக்கிறோம். கூர்பட்ட நம் எண்ணங்கள் என்றுமே வீண்போனதில்லை! அந்த 24 வரட்டும்! 'சுயமரியாதை காப்பாய்' என சொல்லுக்குச் சொல் வலியுறுத்தி இனமுழக்கம் செய்திட்ட தியாகராயர் கல்விக்கூடம் புகும் ஏப்ரல் 24 வரட்டும்!

## வாழ்க....வாழ்கவே!

"தமிழ் வாழ்க"

இப்படி ஒரு முழக்கத்தை தமிழ்நாட்டிலேயே எழுப்ப வேண்டிய அளவுக்கு இந்த நாடு அவலம் நிறைந்ததாகத்தான் இருந்திருக்கிறது!

"தமிழ் வாழ்க!"

இப்படிச்சொல்லவே பலர் வெட்கம் அடையவும் செய்திருக்கிறார்கள்.

தமிழ் வாழ்க!

இந்த மூல முழக்கத்தை ஒலித்திடச் செய்த மொழிக் காவலன்தான் - மக்கள் கவிஞன்தான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனவர். பாரதிதாசன்! . இந்தப் பெயரைச் சொன்னாலே, நாவினிக்கும், நல்லினர் முகமிற்கு! கவைத்தால் தித்திக்கும்! வண்ணத் தமிழே கண்முன் ஓடிவரும்! கவிதை என்பது காளியின் வரம் பெற்ற அன்பர்களுக்கே உரித்தான சரக்கென்று-ஆதியிலன் அடியெடுத்துக் கொடுத்தாலே "உலகெலாம் உணர்ந்து ஓத" முடியும் என்று மற்றவர்கள் நினைத்துக் கொண்டிருந்த நாளில்.

"காளை ஒருவன் கவிச்சுவையை கரை
காண நினைத்த முழு நினைப்பில் அன்னை
தோளசைத் தங்கே நடம்புரிவாள் அவன்
தொல்ல றிவாளர் திறம் பெறுவார்;! —

என்று கவிதைத் தாய்க்கு கட்டியங் கூறியவர் பாரதிதாசன்தான்.

இலக்கியங்களிலேயே கவிதை இலக்கியம் மிகமிக மென்மையானது. 6 அல்லது 7ம் நூற்றாண்டுவரை கூட தமிழில் இந்தக் கலை அருமையாக வளர்ந்தது. ஆனால் அதற்குப் பிறகு எழுந்த கவிதை இலக்கியம் கடவுள் பாசுரம் கொண்டதாக - மீசேசுவரன் புகழ்பாடியே வளர்ந்தது. 18ம் நூற்றாண்டின்பிற்பகுதிவரை-பட்டினத்தடிகள் பாதையின் கடைசி பிரதிநிதியாக வந்த அருட்சோதி அடிகள் காலம்வரைகூட தமிழில் கவிதை இலக்கியம் மறுமலர்ச்சி அடைந்ததாகக் கூற முடியாது. இதன் பிறகு வந்த சுப்பிரமணியபாரதியார் தமிழ்க்கவிதைக்கு மெருகு கொடுத்தார்!

ஆனால் வளரும் தமிழுக்கு வாய்த்த சிற்பிகளைப் பற்றி எண்ணும்போது பாரதிதாசனை இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராக மதிக்கிறோம். அரசியல் கருத்து காரணமாக இன்று அவரிடமிருந்து மாறுபடுபவர்கள் கூட அவரின் "பாண்டியன் பரிசு", "சேரதாண்டவம்" இவற்றிலிருந்து மாறுபட முடியாது. உலகின் தலைசிறந்த காதல் காவியத்தின் ஜோடியாகக் கருதப்படுகிற "லைலா மஜ்னு" வில்கூட, லைலா திருமணமாகி கணவனுடன் சென்றுவிடுகிறாள், நிலைமையுணர்ந்த அவள் கணவன் தான் பின்னர் அவளை கயஸ்உடன் வாழ அனுப்பிவைக்கிறான். ஆனால் பாரதிதாசன் படைத்த காதல் ஜோடியான "பொன்முடி பூங்கோதையில்" பொன்முடி சாகிறான்-பூங்கோதையும்! அதைத் தொடியே, செத்துவிடுகிறாள்! அந்தக் - காவியத்தின் கடைசி வரிகளில்

"செத்தானவன்
செத்தாளத் தென்னட்டன்னம்!!

என்று புதுவைக்கோமான் துக்கநிதோய முடித்து கண்ணீர்க் குளத்தின் மடையைத் திறந்து விடுகிறார்.

கோவலனைக் கொன்றது குற்றம் என்றுணர்ந்த உடனேயே பாண்டியன் செத்துவிடுகிறான்.

பாண்டியன் செத்த அடுத்த நொடி பாண்டியமாதேவி பிணமாகிறாள். இதைத்தான் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்

"கணவனை இழந்தோர்க்கு காட்டுவது
இல் என்று...'!

அவன் அரசியும் செத்தாள் என்று முடிக்கிறார் . இளங்கோவின் இந்தத் தமிழ் உள்ளத்தை எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பிறகு பாரதிதாசனிடம்தான் காணமுடிகிறது!

புரட்சிக் கவிஞரைப்பற்றி யார்யார் என்னென்ன கருத்துக் களைக் கொண்டிருந்தாலும் தமிழ் - வளர வேண்டும் தமிழினம் வாழவேண்டும் மென்பதில் அவர் கொண்டிருக்கிற ஆர்வம்- அக்கறை தனித்தன்மை வாய்ந்தது என்பதை எவராலும் மறுக்க முடியாது. தமிழ் - திருவிடம் - எனின்ற மூன்றாவதை கனிவில் அவர் காண்கின்ற உயிர்ப்பு - பற்று அளவிடற்கரியது!

எனவேதான் கவிஞரை இலக்கியக் கடலில் இன்னொளி காட்டும் கலங்கரை விளக்கமாக போற்று கிறோம். வளமார் தமிழின் வளமே நிறைய கவிஞர் வாழ்க வாழ்கவே என வாழ்த்து கின்றோம்!

வள்ளுவர் உள்ளத்தை படம்பிடித்து மக்களுக்குக் காட்டும் நற்பணியில் கவிஞர் ஈடுபட்டிருக்கிறார் என்ற சேதி நமக்கெல்லாம் உள்ளத்திலே தேன் பாய்ச்சி மகிழ்விக்கிறது. தமிழகம் அவர்தம் இத்தூய தொண்டுக்குத் துணை நிற்க வேண்டும்! கவிஞர்வாய்ந்த நீடு வாழ்ந்து தமிழ் வளர்க்க வேண்டும்! அதுவே நமதாசையென அந்தப் புரட்சிப் புலவன் பிறந்த நாளை உள்ளடக்கிவரும் இந்த கிழமை எட்டின் மூலம் தெரிவித்துக் கொள்வதிலே பெ கொள்கிறோம்! வாழ்க! தமிழ் வளர்த்த பாரதிதாச

# சிலம்பு வழங்கும் செல்வம்

தமிழர்வாழ்வு ஒரு பரந்தகன்ற விளை நிலம். அதற்கு வளந்தரும் வானவெளி தமிழ்ப்பண்பு. அம் மழைச் செல்வத்தைத் தேக்கிக் கொண்டிருக்கும் வானம்பார்த்த ஏரி தமிழிலக்கியம். அதன் பரப்பு கடல் போன்றது. ஆயினும் அதன் கரையோரப் பகுதிகள் ஆழம் குறைந்தவை. வரட்சிக் காலத்தில் அவை காடுமேடாகவும் முட்புதர்களாகவும் மணல் வெளியாகவும் காட்சி யளிக்கின்றன. சற்று ஆழமிக்க பகுதிகள்கூடச் சேறும் சகதியுமாக சிலவேளைகளில் இயல்கின்றன. ஆனால் எக்காலத்திலும் வற்ருத தண்ணுறுஞ் சுனையாய் இலங்கும் ஆழ்தடம் ஒன்று ஏரியின் ஒருகோடியில் இருக்கின்றது. அதுவே தமிழ்ப் பண்பின் வளம் குன்ருச் சேமநிதியாகிய சங்க இலக்கியம்.

சங்க இலக்கியச் சுனையருகே, அச் சுனைக்கே உயிர் தருபவைபோன்ற மூன்று கேணிகள் உள்ளன. அவை நிலத்தின் சகதி நீண்டு ஆழ்ந்து செல்பவை. அத்துடன் அவை பண்பின் சேமவைப்புக்கள் மட்டுமல்ல. பண்பின் ஊற்றுக்கள். அவை வற்ருத ஊற்றுக்கள் மட்டுமல்ல. இறைக்க இறைக்க ஊறும் ஊற்றுக்கள்கூட அல்ல. இறைக்காமலே நீரை ஓயாது கொப்புளிக்கும் உயிர்த் துடிப்புடைய பொங்கல் ஊற்றுக்கள் அவை. தமிழர் பொங்கல் வாழ்வின் வாடாத பழம் புதுச் செல்வங்களான தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகிய பொன்னேடுகளின் உருவில் அப் பொங்கல் ஊற்றுக்கள் வருங்கால வாழ்வுக்கான உளமூட்டி வருகின்றன.

## வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்று

பழைய ஏடுகள்தான் இவைகள் மூன்றும்! ஆனால் மூன்றும் புதுமைக்குப் புதுமை அளித்து வருகின்றன, வருவன. தமிழர் மறுமலர்ச்சியின் இதழ்கள் அவிழும்தோறும், உலகில் புது மலர்ச்சி முளைத்தெழுந்தோறும்-இம்மூன்று ஏடுகளும் என்றும் உலகின் புதுச் செல்வங்களாய் நின்று வளரும் தன்மையனவை. தொல்காப்பியர் குறித்த 'வடு நீங்கு சிறப்பு' உடைய 'கடவுள், கந்தழி, வள்ளி' என்ற முப்பொருள்கள் போல, ஞாயிறு திங்கள், அனல் ஆகிய மூன்று ஒளி விளக்கங்கள்போல அவை புத்துலகில் ஒளி வீசத்தக்கவை.

தமிழர் நாகரீகத்தின் ஆழ, [illegible], உயரங்களை நமக்குக் காட்ட[illegible] ஏடு தொல்காப்பியம். அவர் [illegible]பின் நுட்ப திட்பநயங்களை [illegible]ன் அடிப்படை உயிர்த் துடிப்[illegible] வல்லது திருக்குறள். [illegible] ஒப்பாக, தமிழின் [illegible]ம் பண்புடைய [illegible]யும் கலைப்

பொலிவையும் சுட்டிக்காட்டவல்ல அருங்கலை விளக்கம் சிலப்பதிகாரம். இச் சிலப்பதிகாரம் நமக்குக் கிட்டாது போயிருந்தால், மற்ற தமிழ் இலக்கியப் பரப்பின் உதவியாலோ, தொல்காப்பியம் திருக்குறள் ஆகிய நூல்களாலோகூட, நாம் பண்டைத் தமிழர் இலக்கியத்தின் அருமையை அவ்வளவாக மதிப்பிட்டு அறிய முடியாதவர்களாவோம்.

## உரைகள் அல்ல உறைகள்!

சங்ககாலத்திற்குப் பிற்பட்டு, தமிழர் அடிமை நாட்களிலே, இந்த மூன்று தமிழ்க் கருவூலங்களையும் தமிழர் எவ்வாறு பேணினர் என்பதை நாம் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். அவ் ஒப்பீடு சிலப்பதிகாரத்தின் அருமையை ஓரளவு எடுத்துக் காட்டுவதாக அமையும்.

தொல்காப்பியத்தைத் தமிழர் முற்றிலும் மறந்த நாள் கிடையாது எனலாம். ஆனால் அது மிகத் தொல்பழங்காலத்திலேயே புலவர்களின் உள்ளத்தில் சிறைப்பட்டு விட்டது. தேவார காலத்திலேயே (கி. பி. 7ம் நூற்றுண்டில்) அதுபுதுஎழுத்தாளர்களை பயமுறுத்துவதற்குரிய ஒரு பூச்சாண்டியாகிவிட்டது. அதன் பின்னர் புலவர் படிப்பதற்குரிய புதிய வழி நூல்கள் ஏற்பட்டன. தொல்காப்பியம் புலவர்களால் கூட மிகுதி தீண்டப்படாத பூசைப் பெட்டகம் ஆயிற்று.

அதற்கு உரைகள் எழுந்தன. பூசைப் பெட்டகத்திற்கு அவை பூமாலைகள் இட்டன. புரிந்த புரிந்த அளவில் அவை புகழ் பாடின. புரியாத இடத்தில் பூசை செய்தன,

திருக்குறளில் இடைக்காலப் புகழ் வாழ்வு தொல்காப்பியத்தை விடச் சிறிது 'தேவலை' எனலாம். ஏனென்ருல் அது இலக்கியத்தின் உயிர் நாடியாய், 'பாடும் புலவர்' நாவிலெல்லாம் ஊடாடிற்று. ஆனால் பொதுமக்கள் வாழ்விலிருந்து அது தொலைவிலேயே நின்றது. அத்துடன் காலத்திற்கேற்ற புதுப்புது உரைகள், அதற்குப் புதுப் புது'உறைகளாகவே' பயன் பட்டன. அவை அதன் ஒளி உருவை மறைத்தது மட்டுமல்ல: காலத்திற்கேற்றபடி உருவும் பண்பும் திரித்து, அதற்கு வேறு 'புகை உரு' வையே உண்டுபண்ணின. இவ்வகையில் தொல்காப்பியத்தைக் காட்டிலும் திருக்குறளின் நூலும் புகழும் நன்னிலையில் நம்மை வந்து அடைந்தாலும், அதன் பண்பு அவ்வாறு நம்மை வந்து அடையவில்லை. உரைகளால் முழுதும் விளக்கப்படாத தொல்காப்பியத்தைவிட, 'உறை'களால் பெரிதும் மறைக்கப்பட்ட திருக்குறளின் இடைக்காலப் புகழ் வாழ்வு அவலமுடையதே ஆகும்.

## மறைவுற்ற முழுமதி

சிலப்பதிகாரத்தின் இடைக்கால வாழ்வு மற்ற இரு ஏடுகளின் வாழ்வையும் போன்றதல்ல. அந்த ஏடு எங்கேயோ கிடந்தது—டாக்டர் உ. வே. சாவின் திருக்கரங்களுக்காக அது ஏங்கித் தவங்கிடந்தது!

அங்ஙனம் கிடக்கும் நாளிலும் பொது மக்கள் அதன் கதையை நாடகமாடியதுண்டு. தமிழ் நாட்டாரும் வெளி நாட்டாரும்கூட ஆங்காங்கே கண்ணகி கோவிலைச் சுற்றி வந்து அதன் விபரம் அறியாமலே வணங்கியதுண்டு. ஆயினும் சிலப்பதிகாரம் பொதுமக்களுக்குத் தெரியாத புதை பொருளாகவே டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் வெளிப்படுத்தும்வரை இருந்து வந்தது! அதுமட்டுமோ? தொல்காப்பியத்தைப் போற்றிய புலவர்இருந்தனர். திருக்குறளை தம் கவிதைக்கு ஊற்றுக்கிப் புதுப் பாடல் பாடிய 'பாடும் புலவரும், இருந்தனர். ஆனால் சிலப்பதிகாரம் ஒன்றுதான் இரண்டாயிரம் ஆண்டுகளாக பொதுமக்களாலும் புலவராலும் ஒருங்கே முற்றிலும் மறக்கப்பட்ட செல்வமாக இயங்கிற்று.

சிலப்பதிகார ஆசிரியரையோ, நூலையோ நூலின் சொற்றொடர்களையோ, கருத்தையோ எடுத்தாண்ட புலவர் யாரும் கிடையாது. அது பாரதி ஒருவரே கண்ட— ஆனால் கம்பர் காணுத, சேக்கிழார் கேளாத, அதிவீரராமபாண்டியர் அறியாத—கலைச்செல்வமாக இயங்கி வந்துள்ளது.

மங்கி ஒளி வீசினும் வாடாத வடமீனாக இயங்கிற்று தொல்காப்பியம். மங்காது ஒளிவீசினும் பனிமூடிய கதிரவனாக விளங்கிற்றுதிருக்குறள். ஆனால் சிலப்பதிகாரமோ மறையுமாவின்போது முற்றிலும் மறைவுற்ற முழுமதியாய் இயங்கிற்று.

## காணுத, கேளாத, உரைப்பண்பு!

தொல்காப்பியத்தின் புகழுக்கும் திருக்குறளின் புகழுக்கும் மாறான மற்றுமொரு செய்தி சிலப்பதிகாரத்தின் புகழுக்கு உண்டு.

முதலிரண்டையும் தமிழர் பேணினர்—மொழிப்பற்றுடைய தமிழர் ஒன்றை அதன் முழு உருவும் திருவும் அறியாது உரை செய்து உரை செய்து உண்மைப் பெருமை விளங்காமலே பேணினர். மற்றென்றை பொழிப்பற்றுக் குன்றிய 'தமிழர்' உறையிட்டு உறையிட்டு மூடி மறைத்தும் உருமாற்றியும் கைவிடாது பேணினர். ஆனால் சிலப்பதிகாரத்தை இருசாராரும் முற்றிலும் மறந்தே விட்டனர். ஆயினும் மூன்றுவது ஒரு சாரார்—தமிழகத்திலே புறக்கணிக்கப்பட்ட ஏதோ ஒரு வகுப்பினர் - சமணர் உட்பட்ட சில பழமைப் பூச்சிகள் - அதை வைத்துப் பேணினர். பேணியது மட்டுமோ? அதற்குத் தமிழகம் இதுவரை-இன்றுவரை-அறியாப் பண்புடைய அருமை பெருமை கொண்ட உரைகள் செய்தனர். திருக்குறளின் உரைகளைப்போல அவை மறைக்கவில்லை. தொல்காப்பியத்தின் உரைகளைப்போல அவை மடங்கவில்லை, மருளவில்லை-அவை துணிந்து சிலப்பதிகாரத்தினுடனேயே போட்டியிட முனைந்தன! சிலப்பதிகாரத்தின் புகழுக்கு அவை புகழ் ஊட்டின. இன்று சிலப்பதிகாரம் நமக்கு எவ்வளவு அறிய கருவூலமோ அதனினும் ஒரு சிறிதும் குறைந்த கருவூலங்களல்ல, சிலப்பதிகாரத்தின் உரைகளாகிய அரும்பத வுரையும் அதனை அடுத்து வந்த அடியார்க்கு நல்லார் உரையும்! முதநூலை விளக்கிற்று முதலுரை-இரண்டுக்கும் விளக்கம் தந்து புத்தொளி பரப்பிற்று, பிந்திய உரை.

தமிழ் இலக்கிய வரலாற்றிலே-[illegible] நாட்டு இலக்கிய வரலாற்றிலேயே எளிதில் காணப்படாதஉயிர்த்துடிப்புடைய உண்மை நிகழ்ச்சி இது! உலக இலக்கியத்திலே ஷேக்ஸ்பியருக்குக்கூடக் கிடைக்காத நற்பேறு, இங்கே இளங்கோவுக்குக் கிடைத்துள்ளது!

## ஆரிய மாயைக்கு அப்பாற்பட்ட மாயை

தொல்காப்பியத்தை மறைத்தது யார் அல்லது எது? காலன் அல்லது காலம்! திருக்குறளை மறைத்தது யார் அல்லது எது? காலத்தின் கோலம், ஆரிய மாயை! சிலப்பதிகாரத்தை மறைத்தது யார், அல்லது எது? அவ்விரண்டினும் வலிமை வாய்ந்த ஒரு மாயம், மாயை அது! தொல்காப்பியத்தை யாரும் வேண்டுமென்று மறைக்கவில்லை. அது மறைந்து வந்தது. திருக்குறளை மறைக்க முயன்றவர் உண்டு. ஆனால் மறைக்கமுடியவில்லை. உறைபோட, திரையிடத்தான் முடிந்தது. ஆனால் சிலப்பதிகாரம் மறைக்கப்பட்டது - திரையிட்டல்ல, உறையிட்டல்ல-முழு இருட்டடிப்பு, மறக்கடிப்பு மாயையிலேயே அது புதையுண்டது. அது இன்று வெளிப்பட்டுள்ளதாயினும் இருட்டடிப்பில் உள்ள ஒரு புழை வழியாகவே ஆனால், வெளிப்பட்டு, நூற்புகழுடன் உரைப்புகழும் சேர்ந்து ஒளிவீசத் தொடங்கிய இந்தக் காலத்திலும், அதற்கு மீண்டும் திரையிடப் புதிய மாய

(10-ம் பக்கம் பார்க்க)

பன்மொழிப்புலவர்
**கா. அப்பாதுரை. M.A.L.T.**



# வில்லங்கப் பல்லவி

வெள்ளம் கரைபுரண்டு ஓடியது.

வேதாந்தி ஒருவர் அந்த ஆற்றைக் கடப்பதற்கான ஆயத்தங்களைச்செய்தார். பக்கத்தில் இருந்தவர்களெல்லாம் பரிதாபப்பட்டார்கள். "என்னப்பா, கரையோரத்து மரங்களையெல்லாம் வேரோடு அடித்துக்கொண்டு போகும் இந்த ஆற்றையா கடக்கப்போகிருய்! முடியாது அப்பனே! முடிவிலே செத்து மடியத்தான் போகிருய்," என்று அறிவுரை பகன்ருர்கள். ஆனால் அந்த வேதாந்தி ஆற்றைக் கடப்பதற்காகத் துணிந்து வரவில்லையென்பதையும், கடக்கப்போவதாக வீராப்புக்கூறி, சுற்றியிருந்தோரின் கவனத்தை இழுக்கத்தான் வந்தார் என்பதையும் பிறகுதான் மற்றவர்கள் தெரிந்துகொள்ள முடிந்தது. வில்லன், கதாநாயகனுக கதாநாயகியைத் தானே மையப் புள்ளியாகக் கொள்வான். 'நியூயார்க் பேரிகை'க்காரர் அந்த வேதாந்தியைப்போல, விஷமத்தன மிக்க 'நளின'த்தைக் கையாண்டிருக்கிருர் மதுரையிலே! 'ஏக இந்தியா' என்ற ஒற்றுமை கீதத்திற்கு தான் போட்ட 'தாளத்'தின் ஓசை மதுரைக்குப் பக்கமிருக்கும் 'விருதுநகரு'க்குக் கேட்டால் போதும் என்ற திருப்தியில்தான் தாளத்தை கச்சிதமாகப் போட்டிருக்கிருர் அந்த 'புதுப்பணக்காரர்'. அவரின் மதுரைக் கச்சேரியின் போது 'விருதுநகர்'காரர் விருதுநகரிலேதான் தங்கியிருந்தார் என்ருல் தாளத்திலே அச்சரம் தவறியிருக்காதுதான்.

தி. மு. கழகம் மார்ச் 20-ம் தேதியை ஐந்தாண்டுத்திட்டக் கண்டன நாளாகத் தேர்ந்தெடுத்து நாடெங்கணும் கண்டனக் கூட்டங்களை நடத்தத் தீர்மானித்திருந்தது. கழகத்தின் பேச்சாளர்கள் அனைவருமே அந்த 20-ம் தேதியன்று கண்டனக்குரலை எழுப்பினுர்கள் டில்லி அதிரத்தக்க வகையில்! ஒலிபெருக்கியின் மூலம் நமது தொனியைக்கேட்பதே பாவமென்று எண்ணியவர்களைக்கூட அந்த 'இருபது' எப்படியோ 'ஆமாம்' போட வைத்திருக்கிறது. ஆனால், வெளிநாட்டுச் சரக்கால் காண்டீபத்தை பேரிகையாக்கிய 'பூமான்'தான் கோமாளிக் கூத்தாடியிருக்கிருர் மதுரையிலே! "பெரும், பெரும் அணைக்கட்டுகளையெல்லாம் வடவர்கள் வடநாட்டிலேயே வைத்துக் கொண்டார்கள், அதுபோல பெரும் பெரும் தொழில் நிலையங்களையும் விந்தியத்திற்கு வடக்கே நிர்மாணித்துக்கொண்டார்கள். இது முறையாகாது. தென்னுட்டைச் சுடுகாடாக்கத் திட்டமா?" என்றுதான் நாம் டில்லியைக் கேட்டோம் மார்ச் 20-ல். இதற்கு என்ன பொருள்? தினம், தினம், கமலாவுக்கே கனகாம்பரத்தைச் சூட்டி அழகு பார்க்கிறீர்களே என்று விமலா விம்மி அழுகிருள் என்ருல், தந்தையின் 'பாராமுகத்தை'த் தானே விளக்குகிருள் என்று பொருள் கொள்வர் யாரும்! கமலாவின் நிறத்திற்கும், கனகாம்பரத்திற்கும் எடுப்பாக இருக்கிறதென்று யாராவது கமலாவுக்காக பரிந்து பேசினுல், அவரை 'பெண்ணுள்ளம்' உணராதவர் என்று வேண்டுமானுல் கூறலாம் கண்ணியமாக! அந்தக் குடும்பக் கதையிலே 'பெண்ணுள்ளம்' அறியாதவர்தான் நமது கதையிலே 'நம் உள்ளம்' அறியாதவராக இருக்கிருர்.

பொதுச் சொத்தில் கமலாவுக்கு மட்டும் ஏன் வாழ்வு என்று வினவுகிருள் விமலா! கனகாம்பரம் அவளுக்கு அழகு தருகிறதென்ருல் எனக்கு ஒரு கொத்து காட்டுமுல்லை ஏன் வாங்கித்தரக்கூடாது என்று கேட்கிருள். இதன் உட்பொருளை விளங்கிக்கொள்ளவில்லை. 'எவரெஸ்டின் எதிர்வீட்டு'க்காரர். "வடநாட்டுக்காரர்கள் வாழுகிருர்கள் என்று ஒருசிலர் பொருமைப்படுகிருர்கள்; ஐந்தாண்டுத் திட்டக் கண்டனக் கூட்டங்களெல்லாம் நடத்துகிருர்கள். வடநாட்டுக்காரிக்கு கூந்தல் இருக்கிறது. பூச்சூட்டிக்கொள்ளுகிருள். இங்கே என்ன இருக்கிறது?" என்று பொருள்படப் பேசியிருக்கிருர் மதுரையிலே! அதாவது வடநாட்டிலே நல்ல நதிகள் இருக்கிறதாம். அதனுல்தான் அணைக்கட்டுகளெல்லாம்; அங்கே கட்டிக்கொள்ளமுடிகிறதாம்! பேரிகையார் முழங்குகிருர் இப்படி!

அங்கே நதிகள் இருக்கின்றன: ஆகவே, அணைக்கட்டுகள் எழும்புகின்றன என்ருல், இங்கே மூலப் பொருள்கள் (தங்கம், நிலக்கரி, இரும்புக்கனி) கிடைக்கின்றனவே, ஏன் தொழிற்சாலைகளை எழுப்பக்கூடாது! இங்கே ஏன் அணைக்கட்டு இல்லை யென்று கேட்கிருேம்! பொது வருமானத்தில் ஈவுத் தொகை எங்கே என்றல்லவா கேட்கிருேம்-காட்டுமுல்லை கேட்கும் விமலாவைப்போல! வளரும் இயக்கத்தை எதிர்த்து மக்கள் கவனத்தைக் கவர ஆற்றைக் கடக்கும் வேதாந்தியாகலாமா? அடபாவமே! மக்களென்ன மண்பொம்மைகளா?

★

குடியூரிலே அடிகளார் ஒருவர் கிளம்பியிருக்கிருர். எப்படியோ பெயர் வாங்கவேண்டும்; எல்லோரும் தன்னைப் பற்றியே பேசவேண்டும் என்பதற்காக அந்த அடிகளார் இரட்டைப்படகிலே கால் வைத்துக் கொண்டு வருகிருர். குன்னக்குடியிலே 'அன்னக்காவடி'களின் மகிமை பற்றிப் பேசுவார், குறள் மன்றத்திலே பிச்சை புகுவதைக் கண்டித்து உரை நடத்துவார். ஒன்று, அன்னக்காவடிகளின் தலைவனுக இருக்கவேண்டும், அல்லது, அறிவு சார்ந்தோரின் குழுவிலே சேரவேண்டும்; மனுேதிடம் பெற்ருேர் செய்யவேண்டியது அது தானே! அடிகளார் அப்படியல்ல! தமிழை வளர்ப்பேன் என்பார், அதே நேரத்தில் தமிழுக்கு மாசு கற்பிப்போனுக்கு மடத்துப் பணத்தை அள்ளித் தருவார். தமிழ் வளர, என்ன செய்ய வேண்டும் என்பதையே இன்னும் அந்தத் 'திருப்பெருந்திரு' யோசித்ததாகத் தெரியவில்லை. கோயிலிலே மந்திரம் சொல்லுவதை தமிழிலே சொல்லிவிட்டால் தமிழ் வளர்ந்துவிடும் எனக் கருதுகிருர்! சாக்கடையிலே நெளியும் புழுக்களுக்குப் பதிலாக பட்டுப்பூச்சிகளை ஓடவிட்டால் சாக்கடை ஐவ்வாதுக் கிடங்காகிவிடுமா? அல்லது பட்டுப்பூச்சிகள்தான் பரவச வாழ்வு நடத்தமுடியுமா? தமிழ்நாட்டு ஆலயத்திலே தமிழ் புறக்கணிக்கப் படுகிறது என்று சொன்னேம் அன்று! ஆனால், தமிழிலே மந்திரம் சொல்லிவிட்டால் ஆலயத்துக்கல் 'திருவாய், மலர்ந்தருளி விடும் என்ரு சொன்னேம்! பண்டைத் தமிழ் நூல்கள் பார்ப்பனர்களால் எரிக்கப்பட்டிருக்கிறது, அதைக் கண்டிக்கவில்லை பண்டாரத்தார்; பரிமேலழகர் குறளுக்குச் செய்த தீமையை கண்டிக்க பண்டாரத்தாரின் நாவெழவில்லை; தமிழுக்குத் தொண்டு செய்கிருராம் ஆலயத்திலே! இருட்டறையிலே பெருச்சாளி முணு முணுப்பதிலே சீர்திருத்தம் காண்பதை விரும்புவதைக் காட்டிலும், 'முணு முணுப்பை' ஒரு குறிப்பிட்ட இனத்தார்தான் செய்ய வேண்டும் என்பதை மாற்றி தேவைப்படுவோர், தேவைப்படும் வேளையில், யார் எந்தெந்த வகுப்பாராக இருந்தாலும்மூலஸ்தானம் புகுந்து பூமாலை சூட்டி பூசை நடத்திக்கொள்ளலாம் எனக் கிளர்ச்சி செய்யட்டும்! அந்தக் கிளர்ச்சி பயனுடைய கிளர்ச்சி! அந்தக் கிளர்ச்சி ஆதரவு வாங்கித் தரக்கூடிய கிளர்ச்சி!

தமிழுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்ற தூய எண்ணம் அன்னரின் உள்ளத்தில் ஒளி வீசினுல், நமது மொழிப் போராட்டங்களிலே பங்கேற்கட்டும்! காவியுடையோடுகூட வரலாமென நாம் விதிவிலக்களிப்போம்! கல்லக்குடிக் களம் புகட்டும்! தமிழரின் வியர்வை பண வடிவெடுத்து குவிந்து கிடக்கும்கோயில் சொத்துக்களை தமிழுக்காக செலவு செய்ய முயற்சி எடுக்கட்டும்! சாமியார் நல்லோரின் பாராட்டைப் பெறலாம்! அதுவரை மிரட்டல்காரர்களின் கடைக்கண் வீச்சைத்தான் பெறமுடியும்.

"எவர் ஷார்ப்"

## கண்ணுக்குப் புலப்படாத கல் முதலாளிகள்!

நெஞ்சு வேகிறது! 'உச்சி வெயிலின் தாக்குதலை நிழலிலே இருந்து தவிர்த்துக்கொண்டே' என்ற மனச்சாந்தியை ஆண்டுக்கு ஒன்பது மாதம் பெறமுடியாமல் நைந்துருகும் நம்மவரின் வரிப்பணம் டில்லிக்கு போவது கண்டு நம் உள்ளம் கொதிக்கிறது. அந்த வேதனையை வெளிப்படையாகக் காட்டி, நாடெங்கும் கண்டனக்குரலை எழுப்பிக்கொண்டிருக்கும் இந்த வேளையில், திராவிடத்தின் சொத்து எத்தனை கோயில்களில் முடங்கிக் கிடக்கின்றன என்பதற்கான பட்டியலும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. அது இது;

**செங்கற்பட்டு மாவட்டம்** :—அரங்கநாத சுவாமி கோவில். திருநீர்மலை ரூ. 25,260-8-9; கந்தசுவாமி கோவில், திருப்போரூர் ரூ. 60391-4-6; ஆதிகேசவ பெருமாள் கோவில். ஸ்ரீபெரும்புதூர் ரூ. 8,88,216-14-9; வீரராகவசுவாமி கோவில், திருவள்ளூர் ரூ. 6,32,131-15-0; தேவராஜ சுவாமி கோவில். காஞ்சீபுரம் ரூ. 10,79,412-3-6.

**சென்னை** :—சென்னை கேசவ, சென்னை மல்லீஸ்வரர் கோவில்கள் தேவராஜ முதலி தெரு, தங்கக்கவசங்கள். ரூ. 36,558-4-6; பைரகி மடம்-வெங்கடேஸ்வரர் கோவில். ரூ. 1,12,088-8-6.

**தென்னுற்காடு மாவட்டம்** :—பாடலீஸ்வரர் கோவில். திருப்பாப்புலியூர், ரூ. 4,39,159-8-3; சுப்பிரமணிய சுவாமி கோவில். மைலம் ரூ. 2,18,478-0-6; விருத்தகிஸ்வரர் கோவில். விருத்தாசலம், ரூ. 76547-6-6.

**வடஆற்காடு மாவட்டம்** :—லட்சுமி நரசிம்மசுவாமி கோவில் சோளிங்கபுரம், ரூ. 1,17,818-10-9.

**தஞ்சை** :—ஆதிகும்பேஸ்வரர் கோவில். கும்பகோணம், ரூ. 2,17,873-3-6; சுவாமிநாதசாமி கோவில். சுவாமிமலை, ரூ. 3,72,946-14-3; சீனிவாசப்பெருமாள் கோவில். நாச்சியார் கோவில். ரூ. 1,47,688-4-0; சந்தானராமசாமி கோவில். நீடாமங்கலம், ரூ. 63,214-3-9: சௌரிராஜ பெருமாள் கோவில். திருக்கண்ணுபுரம், ரூ. 1,77,711-5-3; அவரோகண சுவாமி கோவில். நாகப்பட்டினம், ரூ. 1,18,525-6-6; சுப்பிரமணிய சுவாமி கோவில். எட்டிகுடி, ரூ. 48,984-12-0; வெங்கடாசலபதி கோவில். உப்பிலியப்பன் கோவில், ரூ. 1,03,111-3-3.

ரூ. 10 ஆயிரத்திற்கும் அதிகம் பெறுமான நகைகள், விலையுயர்ந்த பொருள்கள் முதலியன உடைய எல்லாக் கோவில்களிலும் உள்ள சொத்துக்களை மதிப்பிடுவதற்கு இன்னு[illegible] குறைந்தது இரண்டு ஆண்டுகளுக்கும் அதிகமாகும் என்று அந்த அறிக்கை கூறுகிறது.

மேற்படி கோவில்களின் மொத்த சொத்துக்களின் ம[illegible] ரூ. 49,36,098-10-0,

பொருள் முதல் வாதம் பேசுவோரே கண்மூடி[illegible] யாக இருக்கும் 'கல்' முதலாளிகளை ஒழிப்பதுதா[illegible]தோ? சொல்லுங்கள்; அவர்கள் உங்கள் கண்[illegible] படவில்லையோ?

# ஆயிரந்தீவு அங்கயற்கண்ணி

## 7

### ஆயிரந்தீவில் அன்னையைக் கண்டனர்.

கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல்.

—குறள்

தளநாயகன் பாதித்தூக்கத்தில் விழித்துக் கொண்டான். எழுந்து உட்கார்ந்தான். அருகில் இராசராசன் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தான். இளவரசனுடைய உதடுகள் தூக்கத்திலும் புன்னகையைக் கொட்டின. அவன் ஏதோ கனவுகண்டிருக்கவேண்டும். இன்பவல்லி அவனோடு பேசிச் சிரித்திருக்கலாம். பாவம்! இளவரசனுடைய காதலும் இப்படியா முடியவேண்டும்? நந்தினி இந்த நேரத்தில் நன்றாகத் தூங்கிக் கொண்டிருப்பாள். அல்லது தளநாயகனின் நினைவால் தூக்கம் பிடிக்காமல் துயருறுவாள். இப்படியெல்லாம் அவன் சிந்தனை சிறகடித்துப் பறந்தது.

மெதுவாக எழுந்து நிலா முற்றத்திற்கு வந்தான். அங்கே நிலவு தன் வெள்ளி ஒளியைச் சிதறிக் கொண்டிருந்தது. ஈழத்திற்குச் சென்றதும், வெற்றிகண்டதும், திரும்பியதும், புயலிலகப்பட்டு பவளத்தீவையடைந்ததும், இன்பவல்லி முதலியோரைச் சந்தித்ததும், பிறகு கோமளத்தீவில் சிறைவைக்கப் பட்டதுவரை அத்தனையும் அவன் மனக்கண்ணெதிரே தோன்றின.

துன்பத்திலும் இன்பமிருப்பதாகவே நினைத்தான் தளநாயகன். சாந்திமத்தீவிலே நந்தினியைச் சந்திக்கப் போகிறோம் என்ற மகிழ்ச்சிதான் எதிர்த்துவரும் துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் சக்தியையளித்தது. நந்தினி வருவாள்--சந்திக்கலாம் என்ற நம்பிக்கையிலேதான் கோமளத்தீவினும் நேரத்தைப் போக்கினான்.

ஆனால் அன்று பகலில் அவன் கேள்வியுற்றசெய்திதான்அவனுக்கு வியப்பையளித்தது. சோழனின் படைகளும் அன்னையின் படைகளுடன் சேர்ந்து விட்டன. சோழ நாட்டை இடைதுறையானிடமிருந்து விடுவித்து, மன்னரையும் மற்றவரையும் விடுதலை செய்யவே அந்தப்படை புறப்பட்டுப் போயிருப்பதாக அறிந்தான். நந்தினியும் தன் போயிருப்பது அவனுக்கு [illegible]த்தைதளித்தது. தானும் [illegible]வரசனும் சிறையிருப்பது [illegible]னுக்குத் தெரியாமலிருக்காது. [illegible]ன் அவனைச் சந்திக்கவில்லை [illegible] ஒன்று, அவனை அவள் [illegible] வேண்டும், அல்லது [illegible]செய்து கடமையை [illegible] வேண்டும். [illegible]

நினைத்துக் கொண்டிருந்தால் என்னவது?

வெளியே எட்டிப்பார்த்தான் தளநாயகன். காவலர்கள் தூங்கிக் கொண்டிருந்தனர். அந்த மாளிகையும் மரம் செடி கொடிகளும் நிலவொளியில் மிதந்து கொண்டிருந்தன. நந்தினியைப் பற்றிய நினைவு. அவன் உள்ளத்தில் வேதனையை யூட்டியது. இனியும் அவளை நினைத்துப் பயனில்லை, விடுதலையாக வேண்டும்; இளவரசனுடன் தாய் நாடு திரும்பவேண்டும்; சோழ நாட்டை மீட்க வழிதேட வேண்டும் என்றெல்லாம் முடிவு செய்தான்.

மீண்டும் இளவரசன் படுத்திருக்கும் இடத்திற்கு வந்தான் தளநாயகன். இளவரசனை எழுப்பினான், இராசராசன் கண்களைத் துடைத்துக் கொண்டே எழுந்து உட்காந்தான். தாங்கள் விடுதலையாகி, சொந்த நாட்டிற்குத் திரும்புவது பற்றி இருவரும் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தனர். இடையிடையே இன்பவல்லியைப் பற்றி ஞாபகப் படுத்தினான் இளவரசன்.

இன்பவல்லியைப் பற்றி இளவரசன் சொல்லும்போது தளநாயகனுக்கு எரிச்சலாக இருந்தது. பட்டத்திற்கு வரவேண்டிய இராசராசன் இன்பவல்லியை மணப்பது சுலபமல்ல. மேலும், அவள் இடைதுறை நாட்டைச் சேர்ந்தவள். அவளுடைய குடும்பத்தினரால் சோழ நாட்டிற்கே கேடுவிளைவிக்கப் பட்டிருக்கிறது. இந்நிலையில் இன்பவல்லியை இளவரசன் மறந்தே யாகவேண்டும். அத்துடன் காதல் செய்வதற்கும் இது நேரமல்ல. இவற்றை வலியுறுத்தினான் தளநாயகன்.

இராசராசனுக்கு இந்த உபதேசம் கசந்தது. "நான் இன்பவல்லியை சந்திக்கத்தான் போகிறேன்" என்று கூவினான் இளவரசன். இந்நிலையில் விடுதலையாகி வெளியேற வேண்டிய விபரத்தைப் பற்றி பேசி, அவன் கோபத்தை மாற்றினான் தளநாயகன்.

விடிந்ததும் ஒருகாவலன் மாளிகைக்குள் நுழைந்தான். அவனிடம் ஒரு ஓலையைக் கொடுத்தான் தளநாயகன். காவலன் அந்த ஓலையைப் பெற்றுக் கொண்டு, வணங்கி வெளியேறினான்.

அன்று மாலை மீண்டும் அங்கே வந்தான் அந்தக் காவலன். ஒரு ஓலையை தளநாயகனிடம் கொடுத்தான். அந்தப் பிரித்துப் படித்ததும் மகிழ்ச்சியால் இளவரசன் முதுகில் தட்டினான் தளநாயகன். "நமது வேண்டுகோளை அன்னை ஒப்புக்கொண்டு விட்டான். நம்மைப் புறப்பட்டு வரும்படியும் கேட்டுக் கொண்டிருக்கிறாள்" என்றான்

"ஆமாம். தங்களுக்காகப் படகு ஒன்றும் காத்திருக்கிறது. இன்று இரவு அன்னையின் மாளிகையிலே உங்கள் இருவருக்கும் விருந்து" என்றான் காவலன். உடனே எல்லோரும் மாளிகையைவிட்டு வெளியேறினர். காவலன் வழிகாட்ட, கடற்கரையை அடைந்தனர், அங்கே அலங்கரிக்கப்பட்ட படகு ஒன்றில், பன்னிரெண்டு வீரர்கள் காத்து நின்றனர். இளவரசனும், தளநாயகனும் ஏறிக்கொள்ள படகு புறப்பட்டது.

அன்னையின் மாளிகையை அவர்கள் அடையும்போது இருட்டி விட்டது. வாசலிலே நின்ற வீரர்கள் "அன்னை வாழ்க! சோழநாடு வெல்க!" என்று வாழ்த்தொலி செய்து வரவேற்றனர். தளநாயகனுக்கும் இளவரசனுக்கும் இது புதுமையாக இருந்தது. இந்த நேரத்தில் நந்தினியும் இங்கேயிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று எண்ணினான் தளநாயகன். ஆயினும் அன்னையைச் சந்திக்கப் போவதிலே அவனுக்கு அளவற்ற உற்சாகம். இருவரும் வீரன் காட்டிச் சென்ற வழியே நடந்து சென்றனர்.

அன்னையின் மாளிகையில் விருந்து முடிய நீண்ட நேரமாகி விட்டது. அதற்குப் பின்னர் ஒரு கூடத்திற்கு அழைத்து வரப்பட்டனர். அந்தக் கூடம் நன்கு அலங்கரிக்கப்பட்டு அழகாகத் தோற்றமளித்தது. இளவரசனுக்கும் தளநாயகனுக்கும் இரண்டு ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. எதிரில் ஒரு மெல்லிய வெண்திரை தொங்கிற்று. அதற்குப் பின்னால் ஒரு ஆசனம் போடப் பட்டிருந்தது. தளநாயகனும் இளவரசனும் வந்து அமர்ந்த சிறிது நேரத்தில், திரைக்குப் பின்னால் அன்னையும் வந்து அமர்ந்தாள். வழக்கம்போல வாயை மூடியிருந்தாள். ஒளி வீசும் இருகண்களை மட்டுமே அவர்களால் பார்க்கமுடிந்தது. அவளுடைய முகத்திலே தோன்றும் உணர்ச்சி பாவங்களை அவர்களால் தெரிந்து கொள்ள முடியவில்லை.

அன்னை பேச ஆரம்பித்தாள். அவள் குரல் மெதுவாகத்தான் கேட்டது. மிகவும் அடக்கத்துடனும் அமைதியுடனும் பேசினாள்.

"சோழகுல திலகம் வாழ்வதாக! சோழ மண்டலம் நீடு நின்று நிலைப்பதாக! மதிப்பிற்குரிய இளவரசே! தளபதியாரே! சாந்திமத்தீவும் அதைச் சேர்ந்த ஆயிரந் தீவுகளும் உங்கள் வரவுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறது. புலிக்கொடி தழைப்பதற்கு ஆயிரந்தீவுகள் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறது. ஆயினும் ஆயிரந்தீவுகளுக்கு அரும்பணி ஒன்று உண்டு. தனிமையாகச் செய்ய வேண்டிய பெரும்பணி அது. அது முடிந்ததும் இந்த ஆயிரந்தீவுகளை சோழ மண்டலத்திற்கே உரிமையாக்க முடிவு செய்திருக்கிறோம்.

"எங்கள் பணியை நிறை வேற்றும் ஒரு பகுதியே உங்களிருவரையும் முதலில் காவலில் வைத்தற்குக் காரணம். உங்களுடன் வந்த படைவீரர்களை எங்கள் படையுடன் சேர்த்துக் கொண்டோம். நீங்கள் பிரிக்கப்பட்டு, காவலில் வைக்கப் படாமலிருந்தால் இக்காரியம் நிறைவேறுமா என்பது சந்தேகமே.

"நந்தினிக்கும் தளபதிக்கும் ஏற்பட்டுள்ள உள்ளன்பையும் நானறிவேன். நான் எடுத்துக் கொண்டுள்ள இப்பெரும் பணிமுடியும் வரை, நீங்கள் ஒன்று சேர்வதை நான் விரும்பவில்லை. நந்தினி பல முறை என்னிடம் வேண்டினாள். தளபதியைச் சந்திக்கத் துடித்தாள். நான்தான் அனுமதி மறுத்தேன்" என்று அன்னை சொல்லிக்கொண்டிருக்கும் போது-தளநாயகன் புருவத்தை நெளித்தான். நந்தினி தன்நினைவாகவே இருப்பதை அன்னையின்வாயிலாகக் கேட்டதும் அவன் இதயம் புளகாங்கிதம் அடைந்தது. அன்னை மேலும் கூறினாள்; நந்தினியும் நம் படைகளுடன் சேர்ந்து சென்றிருக்கிறாள். ஆயிரந்தீவுப் படைகள் சோழ நாட்டை மீட்கச் சென்றிருக்கின்றன. ஆனால் அவை நேரடியாகச் சோழ நாட்டிற்குச் செல்லவில்லை. முதலில் இடைதுறை நாடு செல்லவே கட்டளையிட்டிருக்கிறேன். இந்த விபரத்தை உங்களுக்குச் சொல்லவே அழைத்தேன்.

"இன்று நீங்கள் விடுதலை செய்யப்பட்டிருக்கிறீர்கள். இனி நீங்கள் சோழநாட்டிற்குச் செல்லலாம். ஆனால் நேரடியாக நீங்கள் சென்றால் உங்களுக்கும் ஆபத்துதான். ஆகையால் இருவருமே மாற்றுடையில் இடைதுறை நாடு சென்று, எங்கள் படைகளுடன் தொடர்பு கொண்டு, அவர்களுடன் ஒத்துழைத்தால் சோழநாடு விடுதலையடைய அதிக நாட்கள் பிடிக்காது';

இதைக் கேட்ட தளநாயகன் மகிழ்ச்சி கொண்டான். "அன்னையே! உங்கள் யோசனையே சிறந்தது. ஆனால் ஒரு சந்தேகம். நீங்கள் யார் என்பதை நாங்கள் அறிய ஆசைப்படுகிறோம். நீங்கள் ஆயிரந்தீவிலே வந்திருந்து, இப்பணியை நடத்தக் காரணமென்ன? நந்தினிதான் உங்கள் மகளா? நீங்கள்தான் தூக்கிச் செல்லப்பட்ட கயல் விழியா? உங்கள் படையினருடன் தொடர்பு கொள்ள எங்களுக்கு அத்தாட்சி வேண்டுமே?" என்றான் தளநாயகன்.

"நான்யார்? என் கதை என்ன? ஏன் இந்தப் பணியைச் செய்கிறேன்? என்பது பற்றியெல்லாம் இப்போது வினவவேண்டாம். காலம் விரைந்து வருகிறது. விரைவில் யாவும் புரியும்! உங்களுக்கு ஒரு கடிதம் தருகிறேன். அதன் மூலம் என் படையினருடன் தொடர்பு கொள்ளலாம்" என்றாள் அன்னை.

"பவளத்தீவிலே சிறைவைக்கப் பட்டிருக்கும்இன்பவல்லி யார்? ஏன் அவள் சிறை வைக்கப்பட்டிருக்கிறாள்?" என்று கேட்டான் இளவரசன்.



அவளுடைய பெற்றோரும் சதியில் சம்பந்தப் பட்டவர்கள். ஆனால், அவர்கள் ஒழிக்கப்பட்டு விட்டார்கள். இன்பவல்லி சிறை வைக்கப் பட்டிருக்கிறாள்" என்றாள் அன்னை.

"பெற்றோரின் குற்றத்திற்காக இன்பவல்லியை சிறை வைத்திருப்பது நியாயமா?"

"பாம்பு கடித்தால் அதனுடைய குட்டியை விட்டு விடுவதா?'

"இன்பவல்லிக்கு அது பொருந்தாத உதாரணம்! அவள் குற்றமற்றவள்"

"இது உங்கள் அதிகாரத்திற்கு அப்பாற் பட்டது. ஆனால், இவ்வளவு அக்கரையுடன் அவளைப்பற்றி நீங்கள் ஏன் விசாரிக்கவேண்டும் ?"

"பவளத்தீவில் நாங்கள் தங்கியிருந்தபோது, இன்பவல்லியைச் சந்தித்தார் இளவரசர். அவளிடம் இதயத்தைப் பறிகொடுத்து விட்டார். இப்போது என்ன செய்வதென்று தெரியாமல் திகைக்கிறார்"என்றான் தளநாயகன் சிரித்துக் கொண்டே. இளவரசன் தளநாயகனைக் கோபமாய்ப் பார்த்து விட்டு தலை குனிந்து கொண்டான்.

"நமது பணி வெற்றியடைந்ததும் இன்பவல்லியை விடுதலை செய்து விடுவோம். பிறகு இளவரசர் எண்ணப்படி நடக்கட்டும்" என்றாள் அன்னை.

"அவளை அடிக்கடி நான் சந்திக்க வேண்டும். அதற்கு அனுமதி கிடைத்தால்..."

"பணி முடியட்டும். கடமையில் கருத்தைச் செலுத்துங்கள்" என்று சொல்லிவிட்டு அன்னை எழுந்தாள். அவர்களை வணங்கினாள். பின்னர் மறைந்து விட்டாள்.

மறுநாட்காலை. தளநாயகனும் இளவரசனும் பிரயாணத்திற்குத் தயாரானார்கள். ஒரு வீரன் அங்கு தோன்றி ஓர் ஓலையைக் கொடுத்துச் சென்றான், தளநாயகன் அதை வாங்கிப் பத்திரப் படுத்திக் கொண்டான்.

## 8

### இடைதுறை நாட்டில் இன்பவல்லி.

கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

—குறள்

இடைதுறை நாட்டில் இடைதுறையானின் பிரதிநிதியாகிய **மணிமுடி** என்பவன் ஆண்டுவந்தான். இடைதுறை நாட்டில் சட்டம், அமைதியைப் பாதுகாப்பதற்குத் தேவையான படைகளை நிறுத்திவைக்கப் பட்டிருந்தன. அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளை அடிக்கடி வீரர்கள் மூலம் இடைதுறையானுக்கு அனுப்பிவந்தான் மணிமுடி. சோழநாட்டிலிருந்து இடைதுறையானும் அவ்வப்போது மணிமுடிக்கு செய்திகள் அனுப்பி வந்தான்.

ஒருநாள் ஒருவீரன் மணிமுடியின் மாளிகைக்குள் நுழைந்தான். முறுக்கிவிட்ட நீண்ட மீசை; வளைந்து நெற்றிமேலேறிய புருவம்; சிவப்பேறிய கண்கள், கடுகடுத்த முகம், இடையிலே வாள்; இப்படிக் காட்சியளித்தான் அந்த வீரன்.

"யார் நீ?" என்றான் மணிமுடி. வீரன் வணங்கி நிமிர்ந்தான். "சோழ நாட்டிலிருந்து வருகிறேன். இடைதுறை மன்னர் அனுப்பி வைத்தார். சில சோழ வீரர்கள் இடைதுறை நாட்டிலும், சில இடைதுறை நாட்டுவீரர்கள் சோழநாட்டிலும் இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார். அதற்காகவே என்னை இப்போது அனுப்பினார். என்னை இங்கேயே தங்கும்படியும் சொல்லி விட்டார்" என்றான் அந்த வீரன். பிறகு தான் கொண்டுவந்த ஓலையை மணிமுடியிடம் நீட்டினான்.

மணிமுடி ஓலையை வாங்கிக் கொண்டு அவனை அப்பால் போகச் சொல்லி விட்டான். வீரன் மணிமுடியின்மாளிகையை விட்டு வெளியேறினான். வீதியில் அவன் செல்லும் போது பலர் அவனையே வெறித்துப் பார்த்தனர். ஆனால் ஊருக்குப்புதிதாக விளங்கும் அந்த வீரனை யாரும் சந்தேகிக்கவில்லை. ஏனெனில் நாடு இடைதுறையான் ஆட்சிக்குவந்து, சோழ நாடு அபகரிக்கப் பட்டபிறகு, வேற்று நாட்டு வீரர்கள் அங்கே அதிகமாக உலவுவது வழக்கமாகி விட்டது.

ஓலை கொண்டுவந்த வீரன் ஒரு மாளிகைக்குள் சென்று கதவைத் தட்டினான். பவளத்தீவில் இன்பவல்லியுடன் சிறை வைக்கப் பட்டிருந்த பெண்களில் ஒருத்தி வந்து கதவைத் திறந்தாள். வீரன் உள்ளே நுழைந்தான். வீரனைக் கண்டதும் "யார் நீங்கள்" என்று கேட்டாள். அவன் பதில் பேசாமல் விரலிலிருந்த மோதிரத்தைக் காட்டினான். அவள் வணங்கி வழிவிட்டாள். "இன்பவல்லி எங்கே?" என்று கேட்டான் அந்த வீரன். "மேலே இருக்கிறாள்" என்று பணிவுடன் பதில் கூறினாள். அந்த வீரன் மாடிப்படி ஏறி மேலே சென்றான்.

மறு நாள் அந்த வீரன் மீண்டும் மணிமுடியின் மாளிகைக்குள் சென்றான். மணிமுடியை வணங்கி நின்றான். "என்ன?" என்று கேட்டான் மணிமுடி. வீரன் மணிமுடியின் அருகில் சென்று அவனுடைய காதில் ஏதோ ரகசியம் கூறினான். உடனே மணிமுடி கண்களை உருட்டி, புருவத்தை நெறித்து, நெற்றியை சுருக்கினான். 'உண்மை தானா? இன்பவல்லி வந்துவிட்டாளா? எப்போது?" என்று கேட்டான்.

"நேற்றுதான் வந்தாள். தப்பி வந்ததே ஆச்சரியமாம்: கூடவே அந்த இரு பெண்களும் வந்து விட்டார்கள். அன்னை என்பவளிடம் கைதியாக இருந்தாளாம், அவள் சொல்லும் கதையைக் கேட்டால் நெஞ்சு வெடித்து விடும்போலிருக்கிறது" என்றான் அந்த வீரன்.

"அவள் இங்கே வந்தாலென்ன?" என்று கேட்டான் மணிமுடி.

"வரலாம். ஆனால் அவளுடைய உடல் நிலை சரியில்லை. பல இடங்களில் ஒளிந்து, மறைந்து, நடந்து கஷ்டப்பட்டு வந்து சேர்ந்திருக்கிறார்கள். நீங்களே நேரில் வந்தால் நல்லது என்று அபிப்பிராயப் படுகிறாள் இன்பவல்லி," என்றான் அந்த வீரன்.

"வருகிறேன் போ!" என்று அந்த வீரனை அனுப்பிவிட்டான் மணிமுடி. இன்பவல்லியை சிறையெடுத்துச் சென்று ஆறு ஏழு ஆண்டுகளாகி விட்டன. இப்போது வளர்ந்து பெரியவளாகி யிருப்பாள். பார்க்கவும் அழகியாயிருப்பாள். அவளிடமிருந்து அன்னையைப் பற்றிய செய்திகளறிய வேண்டும். பிறகு அவளையே மணந்து இடைதுறை மன்னரின் அனுமதியின் பேரில் ஆயிரந்தீவையே கைப்பற்ற வேண்டும். அதன் பிறகு... அதன் பிறகு இன்பவல்லியுடன் ஆயிரந்தீவிலேயே தங்கி முடிசூட்டிக்கொள்ள வேண்டும். இவ்வாறெல்லாம் அவன் மனம் கோட்டை கட்டியது.

உடனே சில வீரர்களுடன் மணிமுடி இன்பவல்லியின் மாளிகைக்குள் சென்றான். கதவைத் தட்டினான். அதே பெண் கதவைத் திறந்து "நீங்கள் யார்?" என்றாள். "மணிமுடி! உன்னிடம் இன்பவல்லி ஒன்றும் கூறவில்லையா? எங்கே இன்பவல்லி?" என்று உரக்கப் பேசினான்.

அந்த மங்கை பணிந்து "இன்பவல்லி மேலே இருக்கிறாள். வருகிறவர்களை இன்னாரென்று தெரிந்து கொள்ளாமல், எப்படி மேலே அனுப்புவது? தவறிருந்தால் மன்னியுங்கள்" என்றாள்.

மணிமுடி தன்னுடன் வந்த வீரர்களை அங்கேயே நிற்கும்படி கூறிவிட்டு, படிக்கட்டுகளைக் கடந்து மேலே சென்றான். இன்பவல்லி ஒரு கட்டிலில் படுத்திருந்தாள். பக்கத்திலே மற்றொரு பெண்ணும் அமர்ந்திருந்தாள். மணிமுடியைக் கண்டதும் அந்தப் பெண் எழுந்து நின்று வணங்கினாள். மணிமுடி இன்பவல்லிக்கு அருகில் வந்து நின்றான். "உடல் நிலை எப்படி இருக்கிறது?" என்றுவிசாரித்தான்.

அவன் குரல் கேட்டதும் இன்பவல்லி கண்விழித்துப் பார்த்தாள். பிறகு மெதுவாக எழுந்து உட்கார முயன்றாள். மணிமுடி அவளைப் பார்த்து "வேண்டாம், படுத்திரு, நீ தப்பிவந்ததே இடைதுறைநாட்டின் நல்லகாலம்தான். இன்றே இடைதுறை மன்னருக்குச் செய்தி அனுப்புகிறேன்,'; என்றான்.

"ஐயா! என்னால் பேச முடியவில்லை. காய்ச்சல் அதிகமாயிருக்கிறது. நாளை நீங்கள் அவசியம் வரவேண்டும். உங்களிடம் அதிகம்பேச ஆசைப்படுகிறேன்" என்றாள் இன்பவல்லி.

"அவசியம் வருகிறேன். பயப்படாதே' அரண்மனை வைத்தியரை அனுப்பட்டுமா? உனக்குத் தேவையாக இருந்தால் சில காவலர்களைமாளிகையில் நிறுத்திக்கொள்" என்றான் மணிமுடி.

"வேண்டாம், இதோ என் தோழிகள் இருவர்-நெஞ்சுரம் பெற்ற பெண்கள். எதற்கும் அஞ்சாதவர்கள். இவர்களின் உதவியில்லையானால் நான் தப்பி வந்திருக்க முடியாது. அவர்களே இங்கும் உதவியாயிருக்கிறார்கள். நான் ஒரு தீவிலே சிறைவைக்கப்பட்டிருந்தேன். அப் பிரதேசம் பிடிக்காமல் அடிக்கடி எனக்குக் காய்ச்சல் வருவதுண்டு, அதற்கு வைத்தியம் செய்து இவர்களுக்கு நல்ல அனுபவமுண்டு. ஆகையால் எனக்கு வைத்தியர்களோ வீரர்களோ தேவையில்லை ; நீங்கள் மட்டும் நாளை அவசியம் வரவேண்டும்" என்றாள் இன்பவல்லி.

மணிமுடி இன்பவல்லியைப் பார்த்ததும் அவளுடைய அழகிலே மனதைப் பறிகொடுத்தான். அவளுடைய இனிமையான பேச்சு அவனுக்குப் போதையாக இருந்தது. 'இனி இவள் மணிமுடியின் கூண்டுக்கிளிதான்' என்று முடிவு கட்டினான். மறு நாள் வருவதாகவும், இன்பவல்லியை அக்கறையுடன் கவனிக்கும்படியும் தோழிகளிடம் சொல்லிவிட்டு அங்கிருந்து அகன்றான் மணிமுடி,

அன்று மாலையே ஒரு இளம் வாலிபன் முகத்தை மறைத்துக் கொண்டே அந்த மாளிகைக்குள் நுழைந்தான். கூர்ந்து பார்த்தால் அவன் முகத்திலே மீசையை ஒட்ட வைத்திருப்பது நன்கு தெரியும். கதவைத் தட்டியதும் வழக்கம் போல் அந்தப் பெண் வந்து கதவைத் திறந்தாள். எதிரே நின்ற வாலிபனைப் பார்த்ததும் "யார் நீ?" என்று கேட்டாள். ஆனால் அந்த வீரன் பதில் ஒன்றும் அளிக்க

வில்லை. "எங்கே இன்பவல்லி?" என்று கேட்டான் கடுமையாக.

"நீ யார் என்பதை முதலில் சொல்!" என்றாள் அந்தப் பெண்.

"நான் மணிமுடியின் ஒற்றன்" என்றான் அந்த வீரன்.

"எங்கே வந்தாய்?"

"இன்பவல்லியைப் பார்க்க!"

"மணிமுடியைத் தவிர வேறு யாருக்கும் அனுமதியில்லை!'

"நான் இந்நாட்டு ஒற்றர் தலைவன், மணிமுடி புகமுடியாத இடத்தில்கூட நான் புகுந்து விடுவேன். எனக்குப் பரிபூரண உரிமையுமுண்டு."

"அப்படியானல் மணிமுடியின் உத்தரவு எங்கே?"

"என்னைப் பொறுத்த வரையில் தேவையில்லை. நீ அனுமதிக்காவிட்டாலும் நான் மீறிச்செல்ல முடியும்."

"மீறி நடந்துவிட முடியும். ஆனல் மணிமுடியின் தண்டனையையும் எதிர்பார்க்க வேண்டும்."

"உங்கள் மீது சந்தேகப்படுகிறேன். அன்னே, தளநாயகன், இராசராசன், மங்கை, நந்தினி முதலியோர் உங்களை வேவுக்காரிகளாக இங்கு அனுப்பியிருப்பதாகக் கேள்விப்பட்டேன். இதைத் தெரிந்துகொள்ளவே இங்கு வந்தேன். இன்பவல்லியிடம் இதைப் பற்றி விசாரிக்கமணிமுடியே என்னை அனுப்பினர்" என்றான் அந்த வீரன் சிறிது கரகரப்பான தொனியில்.

உடனே அந்தப் பெண்ணுடைய முகம் வெளுத்துவிட்டது. "நாங்களா வேவுக்காரிகள். இது யாரோ கட்டிவிட்ட கதை. என்னுடன் வாருங்கள். இன்பவல்லிடம் அழைத்துச் செல்கிறேன்" என்றாள் சிறிது துணிவு வரப்பெற்றவளாய்.

கதவைத் தாளிட்ட பிறகு இருவரும் இன்பவல்லி மிருக்குமிடம் சென்றனர். காலடி ஓசை கேட்டதும் உட்கார்ந்திருந்த இன்பவல்லி நீட்டி நிமிர்ந்து படுத்து விட்டாள். பக்கத்திலிருந்த பெண் ஒரு துணியால் அவளுடலைப் போர்த்தினள்.

உடனே அந்த வீரன்," அவ்வளவும் சூழ்ச்சி! நீங்கள் வேவுக்காரிகள் தான். உங்கள் பெற்றோர் இடைதுறை நாட்டிற்காக எவ்வளவோ சேவை செய்தனர். நீங்களோ மாறாக இந்நாட்டைக் காட்டிக் கொடுக்கிறீர்கள்!" என்று சத்தமிட்டான். ஆனல் இன்பவல்லி கண்ணைக்கூட திறந்து பார்க்கவில்லை. அந்த வீரன் துணிவுடன் இன்ப வல்லியின் அருகில் வந்து அவளுடைய நெற்றியில் கைவைத்துப்பார்த்தான்.

"நீங்கள் ஒற்றராக இருக்கலாம். ஆனல் பெண்கள் மட்டும் தனித்திருக்கும் இடத்தில் நுழைவதும், பருவம் வந்த பெண்ணின் உடலைத் தொடுவதும் தகாது" என்றாள் தோழிகளில் ஒருத்தி சிறிது கோபமாக.

அந்த வீரன் கேலியாகச் சிரித்தான். "நீங்கள் பலே கைகாரிகள்தான். ரகசிய வேவுக்காரிகள்தான். நீங்கள் சொல்வதெல்லாம் பொய் என்று இப்போது தெரிந்து கொண்டேன்" என்றான்.

"இது வீண்குற்றச்சாட்டு" என்று குமுறினாள் அந்தப் பெண்.

"இதோபார்! இன்பவல்லிக்குக் கடுமையான காய்ச்சல் என்றீர்கள். இவளுடைய நெற்றி சில்லிட்டுப் போயிருக்கிறது" என்றான் அந்த வீரன்.

"காய்ச்சல் தணிந்து விட்டதா?" என்று கேட்டு, இன்பவல்லியின் நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள் அந்தப் பெண்.

"என்னிடம் இந்தப் பாசாங்கு வேண்டாம். இன்று காலையில் தான் இளவரசன் இராசராசன் கைது செய்யப்பட்டான். அவன் சொல்லிவிட்டான் உங்களுடைய ரகசியத்தை" என்று அந்த வீரன் கூறியதும், "ஆ!" என்று அந்த மூன்று பெண்களும் ஒரேநேரத்தில் கத்திவிட்டார்கள்.

"இன்பவல்லி! எழுந்திரு! இனி உன் தந்திரம் என்னிடம் பலிக்காது" என்று சொல்லிக்கொண்டே அவளுடைய கையைப் பிடித்துத் தூக்கி நிறுத்தினன். இன்பவல்லி பயந்து நடுங்கினள். மற்ற இரு பெண்கள் முகத்திலும் அச்சமும், கலவரமும் மாறிமாறித் தோன்றியது. அந்த வீரன் அட்டகாசமாகச் சிரித்தான்.

**தொடரும்**

## தி. மு. கழகப் பொதுக்குழு

**24-4-55**ல் சென்னை வண்ணாரப்பேட்டை தியாகராயர் கல்லூரியில் நடைபெறவிருக்கும் தி. மு. கழகப் பொதுக் குழுவிற்கான ஏற்பாடுகளை சென்னை மாவட்ட தி. மு. கழகம் சிறப்புற கவனித்து வருகிறது.

வெளியூர்களிலிருந்து வரும் பொதுக்குழு உறுப்பினர்களை வரவேற்க சென்னையின் இரு பிரதான (சென்ட்ரல்-எழும்பூர்) புகைவண்டி நிலையங்களிலும் கழகச் சின்னம் அணிந்து தொண்டர்கள் அணிவகுத்து நிற்பர். வெளியூர் பொதுக்குழு உறுப்பினர்கள் கழகத் தொண்டர்களின் வாயிலாக தியாகராயர் கல்லூரியை அடைவதற்கான வழியையும், வசதியையும் பெற்றுக் கொள்ளலாம்.

இளம்பரிதி

சென்னை மாவட்ட தி. மு. க. செயலாளர்

## அறிஞர் அண்ணா

சென்னை சுந்தர வதனம் நர்ஸிங் ஹோமில் 13-ம் தேதி 'ஹைட்ரசில்' ஆப்ரேஷன் செய்யப்பட்ட அண்ணா அவர்கள், 21-ம் தேதி காலை நர்ஸிங் ஹோமிலிருந்து வெளி வந்து விட்டார்கள். பூரணகுணம் அடையும் வரையில் ஓய்வு தேவைப்படுகிறது. இப்பொழுது சென்னையில்தான் தங்கியிருக்கிறார்கள். 24-ஆம் தேதி பொதுக்குழு கூட்டத்தில் அவசியம் கலந்துகொள்வார்கள்.

## பேராசிரியர் நூற்றாண்டு விழா

### கொப்பனுபட்டி

பேராசிரியர் மனேன்மணீயம் திரு. பி. சுந்தரம் பிள்ளை அவர்களின் நூற்றாண்டு விழா 3-4-55 மாலை 6 மணிக்கு கலைமகள் கல்லூரியில் மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி பிரின்ஸ்பால் திரு. புலவர் மு. கோவிந்தசாமி பி. ஓ. எல். ஹானர்ஸ், அவர்கள் தலைமையில் தொடங்கப்பெற்றது.

விழாத்தலைவர் அவர்கள் திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு பற்றியும், தமிழுக்கு அவர் செய்த சிறந்த தொண்டினைப் பற்றியும் கூறினர்கள்.

அடுத்து மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி விரிவுரையாளர் திரு. ஆர். சோமசுந்தரம் அவர்கள் மனேன்மணீய நாடகத்தை விரிவாக எடுத்துரைத்து ஆங்காங்கு பல மேற்கோள்களுடன் ஒப்பிட்டு உரைத்தார்கள்.

முடிவாக கல்லூரித்தலைவர் திரு. அ. மெய்யப்பா திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் பாடல்கள் சிலவற்றை விளக்கிக்கூறி, தமிழுணர்ச்சியும், நாட்டுணர்ச்சியும் உண்டாக்கிய ஒப்பற்ற பெரியாரென புகழ்ந்துரைத்து,வந்திருந்த அனைவருக்கும் வந்தனம் கூறினர்கள்.

கும்மி, கோலாட்டம் நடைபெற்றதும், நாட்டுப்பாடலுடன் விழா 8-45 மணிக்கு இனிது முடிவுற்றது.

### சின்னமனூர்

இவ்வூர் கிழக்குத் தெரு இளங்கோ படிப்பகத்தின் சார்பில் 10-4-55 ஞாயிற்றுக்கிழமை இவ்வூர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் வித்துவான் கு. சேதுராமலிங்கம் அவர்களது தலைமையில் "பேராசிரியர் விழா," மிகவும் சிறப்பாக நடைபெற்றது; அவ்வமயம் இவ்வூர், மாணவர்கள் சொற்பொழிவாற்றினர்.

### நெல்லை

"மனேன்மணீயம் சுந்தரனார் விழா" 10-4-55 அன்று நெல்லை இளைஞர் கூட்டுறவுக் கழகத்தின் சார்பாக நடைபெற்றது. பலர் சொல்லாற்றினர்.

### சென்னை 12-வது வட்டம்

மஜீத் மன்ற முதலாண்டு விழாவும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை நூற்றாண்டு விழாவும் 10-4-55 ஞாயிறு மாலை 6 மணிக்கு மல்லீஸ்வரர் கோயில் திடலில் சிறப்பாக நடைபெற்றது. புலவர் பு. செல்வராஜ் தலைமை தாங்கி, முன்னுரை சொற்பொழிவு நடத்தினர்.தோழர்கள் கண்ணதாசன், ருக்மாங்கதன், பெருமாள், வெ. கி. பார்த்தசாரதி ஆகியோர் சொற்பொழி வாற்றினர்கள்.

தலைவர் முடிவுரைக்குப்பின் செயலாளர் நன்றிகூற கூட்டம் இனிது முடிந்தது.

### ஆம்பூர்

17-4-55 ஞாயிறு மாலை 6 மணிக்கு ஆம்பூர் நேரு திடலில் திருவள்ளுவர் கழகத்தின் சார்பில் பேராசிரியர் நூற்றாண்டு விழா திரு. ர. சம்பந்தி,அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. கு. மு. அண்ணல்தங்கோ, அவர்கள் "பேராசிரியர் சுந்தரம்" அவர்களுடைய படத்தைத் திறந்து வைத்து "அறவண்ணலும் அழகண்ணலும்" என்னும் பொருள் குறித்துச் சொற்பொழிவாற்றினர். பேராசிரியர். சி. இலக்குவனர், எம். ஏ, எம். ஓ. எல். அவர்களும், மற்றும் பலரும் சொற்பொழிவாற்றினர். பொதுமக்கள் அனைவரும் விழாவில் கலந்துகொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.

### சித்தூர்

10-4-55 அன்று பேராசிரியர் திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் 100-வது ஆண்டு விழா கொண்டாடி மாபெரும்பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. பொதுக்கூட்டத்திற்கு சரோஜினி அம்மை பி. ஏ. அவர்கள் தலைமைவகித்தார்கள்.புலவர், ஆ. மணிஎழிலன், புலவர், கூத்தரசு, மற்றும் பலர் சொற்பொழிவாற்றினர்கள் கூட்டத்தில் பாரதி நாடக சபா அவர்களின் நாடகம் ஒன்று நடத்திக்காண்பிக்கப்பட்டது.

### பெங்களூர்

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் நூற்றாண்டு விழா, 9-4-55. சனிக்கிழமை காலை 10 மணிக்கு பெங்களூர் தண்டு வட்டத்தில் உள்ள அன்னவசந்தி சங்கத்தில் மாணவர் சார்பாக நடத்தப்பட்டது. விழாவுக்கு பேராசிரியர் தண். கி. வேங்கடாசலம் எம். ஏ. அவர்கள் தலைமை தாங்க, தோழர், நாஞ்சில் கி. மனோகரன் நீண்டதோர் சொற்பொழிவு ஆற்றினர்.



### முதல் கடிதம்

நண்பா,

நீ அரசியலில் தலையிடப்போவதாக எழுதியிருக்கிறாய். மகிழ்கிறேன். உன்னைப் போன்ற வசதியுள்ள குடும்பத்தில் பிறந்தவர்கள் அரசியலில் பங்கேற்றால்தான் தமிழ்நாட்டு அரசியல் ஒழுங்குபடுமென்று நினைக்கிறேன். வறுமையில் வாடுவோருக்கும் தமிழகத்து அரசியலுக்கும் பரம்பரை விரோதம். வறுமை அவர்களின் நாணயத்தைத் தின்றுவிடுகிறது. அவர்களுடைய தியாகத்திற்கு களங்கம் பூசுகிறது. ஆகவே, உன்னைப் போன்றவர்கள்தான் அரசியல் வாழ்வுக்கு உகந்தவர்கள் என்பது என் முடிவு. நீ அரசியலில் பங்கேற்குமுன் சேரப்போகும் அரசியல் கட்சிகளைப் பற்றி நன்கு அறிந்துகொள்வது நல்லது.

உனக்குத் தெரியும்; நான் அரசியலில் பங்கேற்று ஏறத்தாழ ஆறு ஆண்டு காலம் உருண்டுவிட்டது. இந்தக் இடைக்காலத்தில், பொது உடைமைக் கட்சி பற்றியும், ஆளும் காங்கிரஸ் கட்சி பற்றியும் ஓரளவு நான் புரிந்து கொண்டிருக்கிறேன். அவைபற்றி என் கருத்தை அறிந்த பின்பு நீ ஒரு முடிவுக்கு வருவது நல்லது.

இதோ, இன்றைய கடிதத்தில் பொதுஉடைமைக்கட்சியின் 'ஐக்கிய தமிழகத்'தைப் பற்றி எழுதியிருக்கிறேன்; படி!

# 38-லே முனிவர் வேடம்! 54-லே ஐக்கிய தமிழகமா?

## முடிமன்னன் மடங்கல்

அன்பு நண்பா,

பொதுவாழ்வின் தலைவாசலில் நிற்கும் என்னை இந்தப் பொல்லாத கடிதங்கள் தடுக்கின்றனவே என்று எண்ணிவிடாதே! நீ பிணமாகி, உன்னை மண்மேவி அதன்மீது புல், பூண்டு முளைக்கும் வரை நீ புகுந்த முதல் கட்சியே வாழ்வின் இறுதிக் கட்சியாகவும் இருக்கவேண்டுமென்ற என் ஆசையின் விளைவுதான் இந்தக் கடிதங்கள் நண்பனே!

பொதுவுடைமைக் கட்சியிலே சேர்ந்தாலென்ன என்று கூட நீ எண்ணியிருப்பாய். மொத்தத்தில் சொல்லுகிறேன் பொதுவுடைமைக் கட்சி தென்னாட்டுக்குத் தேவையில்லாத கட்சி. குறிப்பிட்ட நான்கைந்து பேரின் ஆதிக்கத்தை ஒழிப்பதற்கு ஒரு இயக்கமே கச்சை கட்டிக்கொண்டு வேலை பார்க்கத்தான் வேண்டுமா? அந்தக் கட்சிதான் எப்போதாவது தனித்து நின்று ஒரு காரியத்தைச் சாதித்ததுண்டா? தமிழ்நாட்டுஅரசியலின் கடந்த கால நிகழ்ச்சிகளை ஒரு முறை நினைவுக்கு இழுத்து வந்து பார்த்தால் இன்றைய பொது உடைமைக் கட்சி, இன்று நான் சார்ந்திருக்கும் திராவிடர் இயக்கத்தைக் காட்டிலும் பதினைந்து ஆண்டுகள் அரசியலில்

'ஜூனியர்' என்பது நன்கு விளங்கும், பச்சையாக எழுதுகிறேனே என்று கருதுகிறாயா? ஆம், பச்சையாகத்தான் எழுதுகிறேன்; ஆனல் கொச்சைத் தமிழில் எழுதமாட்டேன்; ஓராண்டு காலம் அரசியல் கண்ணியமுடைய பெருந்தலைவனிடம் பொறுப்பாக இருந்து பணியாற்றியவன்; உள்ளத்தைப் புண்ணாக்கும் சுடுசொல்லை, உதட்டிலே தெளியும் புன் சிரிப்பால் ஒதுக்கிடும் குணம் கொண்டோன் அத்தலைவன்.

நண்பா, 'தனித்தனியாகப் பிரிந்து வெவ்வேறு குடையின் நிழல்களிலே அகப்பட்டு விழிக்கும் தமிழ் பகுதிகள் ஒரே குடையின் கீழ் வரவேண்டும்; தமிழ்நாடு தமிழருக்காக வேண்டும்' என்று நாங்கள் 1938 செப்டம்பரில் பரணி பாடியபோது-அதே ஆண்டு டிசம்பரில் வேலூர் மாநாட்டில் தமிழ்நாட்டின் எதிர்காலத்திட்டம் குறித்து பேசப்பட்டபோது - அதற்கு மறுநாள் சென்னை நீதிக்கட்சி மாநாட்டில் தமிழ்நாடு தனி நாடாக ஆக வேண்டுமென்று வலியுறுத்திக்கூறப்பட்டபோது 1939 டிசம்பரில் தமிழ்நாடு தமிழருக்கே என்றதிட்டத்தை நாட்டுமக்களுக்கு விளக்கிட விழா நடத்தியபோது இன்று ஐக்கிய தமிழகம் கேட்கும் பொது உடைமைக் கட்சி அன்று எங்கே போயிருந்தது? 38லே நாங்கள் கேட்டோம் - 54லே அவர்கள் கேட்கத் தொடங்கியிருக்கிறார்கள்! இடையிலே பதினறு ஆண்டுகள்! தமிழ்நாடு தமிழருக்காக வேண்டும் என்று நாங்கள் கூறிய நேரத்தில் 'வாய் பேசா வனத்திர முனிவர்'களாகஇருந்த பொதுவுடைமைக்கட்சி, அன்றைய எங்களது லட்சியத்தைப் புரிந்து கொள்வதற்குப்பதினறு ஆண்டுகள் பிடித்திருக்கின்றன. 38/54!! மறந்து விடாதே! இன்னென்று சொல்கிறேன் கேள்!

திராவிடர் திருநாள்! இந்த விழாவைத்தான் திராவிடர் இயக்கம்தலையாயதிருநாளாகக் கொண்டாடி வருகிறது என்பதை நான் உனக்கு விளக்கிடத் தேவையில்லை. விவசாயி கொட்டிய வியர்வையை நெற்குவியலாகக்காண்பதின் நினைவு விழாவாக-நன்றி கூறும் திரு விழாவாக திராவிடரியக்கம் பொங்கற்திருநாளைமதிக்கிறது.

ஆனல் தென்னாட்டுப் பொதுவுடைமைக்கட்சி இத்தனை நாளாக அகில உலகம், சர்வ ஜனம், என்றெல்லாம் பேசித் திரிந்துவிட்டு இந்த ஆண்டு 'நாங்களும்' பொங்கல் திருநாள் கொண்டாடுகிறோம் என்று இறங்கியிருக்கிறது. பொது உடைமைக்கட்சி பொங்கல் விழா கொண்டாடுவதிலே எங்களுக்குப் பொறாமையில்லை. மற்ற இயக்கங்களுக்கெல்லாம் இப்படிப்பட்ட தொழிலாளர் விழாக்களுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டிய பொதுவுடைமைக்கட்சி 'நாங்களும்' கொண்டாடுகிறோம் என்று சொல்லுகிறதே என்று வருத்தத்தான் செய்திருக்கிறோம், ஒருகணம் உன்னை சிந்திக்க வேண்டுகிறேன், 'நாங்களும்' என்பது யார் சொல்ல வேண்டியசொல்? வியர்வையை மதிக்காத ஒரு விஜயராகவ ஆச்சாரியார் சொல்லியிருந்தால் அதற்கு அர்த்தமுண்டு; உழுதுண்டு வாழ்வோரை உதாசீனப்படுத்தும் ஒரு உப்பரிகை உலகநாதர் சொல்லியிருந்தால் அதற்குக் காரணம் காணமுடியும்-தொழிலாளர் பாசறை சொல்லலாமா? பாட்டாளி வர்க்கத்தினரின் முகாமிலிருந்து இப்படி ஒரு சொல் ஒலிக்கலாமா?

தமிழ்நாடு தமிழருக்கே என்ற எங்களது முக்கிய கருத்தை ஏற்றுக்கொள்ள பதினறு ஆண்டுகள்-உழைப்பாளர் விழாவில் பங்கேற்க இப்போது 'வேண்டாத முன்னுரை'கள்-அதுவும் திராவிடர் திருநாளை நாங்கள் ஏற்று சிறப்புற நடத்த முயன்ற ஆறு ஆண்டுகளுக்குப்பிறகு! ஆரம்பத்திலே குறிப்பிட்டேனே இன்றைய தென்னாட்டுப் பொதுஉடைமைக்கட்சி அரசியலிலே எங்களுக்கு 'ஜூனியர்' என்று -இப்போது அதை நீ ஒப்புகிறாயா? ஒப்பினல் மகிழ்வேன்! ஆனல்,ஒப்பாவிட்டால் கவலைப்பட மாட்டேன். 'திராவிட நாடு திராவிடருக்கே ஆக வேண்டும்' என்ற இன்றைய எங்களது ஜீவலட்சியத்தை தென்னாட்டு பொது உடைமைக் கட்சி ஒப்புக்கொண்ட பிறகு இதையும் ஒரு உதாரணமாக உனக்கு எடுத்துக்காட்டி உன்னை மகிழவைப்பேன். அத்தக்காலம் வெகுதூரமில்லை! 38/54! இடையிலே பதினறு ஆண்டுகள்!

44லே திராவிடர் கழகம் அமைத்தோம் திராவிடம் பிரிவதை கட்சியின் மூலாதாரத் திட்டமாக்கினேம், எனவே 'தமிழ்நாடு' இலட்சியத்தின் பதினறு ஆண்டுகளை 'திராவிட கழகம்' பிறந்த ஆண்டோடு கூட்டிப்பார்த்தால் 1960லே பொதுஉடைமைக்கட்சி திராவிட நாடு திராவிடருக்காகபோர்க்களம் புகுந்துதான் ஆகவேண்டும். எனது அழியாத இந்த நம்பிக்கையில் ஆண்டுக்கணிப்பு வேண்டுமானல் தவறலாம்-நிச்சயமாகச் சொல்கிறேன் இந்த நம்பிக்கை நாசமாகிவிடாது என்பது மட்டும் உறுதி!

**1938 / - 1954 /**

**1944 / - 1960 /**

சரித்திரத்தை இஷ்டப்படி மாற்ற எடுத்துப்படித்த உனக்கு இந்த ஆண்டுகளை மனதிலே இருத்திக்கொள்வது கடினமல்ல என்று நினைக்கிறேன். வருகிறேன், அடுத்த சனியன்று சந்திக்கிறேன்.

அன்பு,

முடிமன்னன்.

**பாவைக் கூத்து**

கடிதம் 2.

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

ஆற்றல்கள் எழுகின்றன, எழுந்து வருகின்றன.

ஓர் ஆரியப் பெரியாரே வழிமிட்ட இந்த அரிய நூலினை ஆரியர் பாசறையின் அருகில் இருந்து குளிர் காயும் ஒரு தமிழ்ப் பெரியாரும், திராவிடர் பாசறைக்கு அருகிலேயே துணிந்து வந்து குளிர்காய முயன்று வரும் மற்றொரு தமிழ்ப் பெரியாரும் இரு வேறு திசையிலிருந்து இரு வேறு பாணம் தொடுக்க முனைந்துள்ளனர்.

பகைவன் எதிர்ப்பைவிட வலிமையானது 'நண்பன்' எதிர்ப்பு - ஏனென்றால் நண்பன் உருவில் பகைமை அருஞ்செயல் செய்ய முடியும். ஆரிய மாயை அடிக்கடி இந்த உருவெடுத்து வேலை செய்ததுண்டு. அது ஆரிய எதிர்ப்புக்குரல் எழுப்பிக்கூட வேலை செய்யவல்லது, வேலை செய்ததுண்டு. திராவிட இயக்கத்தின் காதில் அணிமைக் காலத்திலே கேட்ட—கேட்கும் இரு குரல்களை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

## இனத்தை எதிர்க்கும் இனக்குரல்கள்

ஒன்று, திராவிடம் தனித்தமிழ்ச் சொல்லா? சங்க நூல்கள் அதை யறியுமா? திருக்குறள், தொல்காப்பியம் அதை வழங்கியதுண்டா? இவ்வாறு தனித்தமிழுக்குப் பரிந்து பேசுவதுபோல, சங்க இலக்கியப் பண்புக்கு இயங்குவதுபோலக் கேள்வி கேட்கும் கம்பரடியார், வால்மீகி அடியார் உண்டு. இந்தக் கேள்வியைக் கேட்பவர் தனித் தமிழ்த் தலைவர், தனித்தமிழின் முடிசூடா மன்னர் மறைமலையடிகள் அல்ல, அல்லது அவர் அடியார், அவர் அன்பர்கள் அல்ல. இக் கேள்வியை அத்தகையவர்கள் எழுப்பி இருந்தால் கேள்வி தவறு என்று நாம் கருதினாலும், கேட்பவர் உளப்பண்பை, உண்மைப் பற்றை, மதித்திருப்போம். ஏனென்றால் அவர்கள் தனித்தமிழுக்குப் பரிந்தே, ஆரியத்தமிழை வெறுத்தே இக்கேள்வியைக் கேட்டிருப்பர். ஆனால் இங்கே கேட்பவர் ஆரியத் தமிழ், கலப்புத்தமிழ்க் கூட்டத்தினர் என்பதே கேள்வியின் குறும்புத் தன்மையை நன்கு குறித்துக் காட்டுகிறது.

இதுபோன்ற மற்றொரு கேள்வி, 'இராவணன் திராவிடனா, தமிழனா? அவன் முதல்தர ஆரியனாயிற்றே! காசிபர் குலத்தோன்றலாயிற்றே!' என்பது. இது கேள்வியல்ல, கேள்வி உருவில் வந்த ஒரு புதுப்பிரசாரம். இங்கும் கேட்பவர் ஆரியரானால், அல்லது ஆரிய திராவிட வேற்றுமை பாராட்டாத உலகப்பற்றாளர், மனித இனப்பற்றாளரானால், கேள்வியில் பொருளுண்டு, பயனுண்டு. ஏனென்றால் அத்தகையவரின் கேள்வி அவர் மனமார்ந்த எண்ணத்தையே குறிக்க இடமுண்டு. ஆனால் ஆரியருக்கு ஒரு நீதி, அல்லாத நாட்டு மக்களுக்கு மற்றொரு நீதி என்ற கொள்கையின் அடிப்படையில் அமைந்த ஸ்மிருதிகள் புராண இதிகாசங்களை ஏற்றுக்கொண்ட இந்துமத ஆதரவாளர் - இந்தியாவின் சட்டத்தை ஆதரிப்பவர் - சமுதாய சாதி அநீதிகளை எதிர்க்க விரும்பாது நேரடியாகவோ மறைமுகமாகவோ ஆதரிப்பவர்களிடமிருந்து இந்தக் கேள்வி வரும் போது, அது வழக்கறிஞரின் மாட்டி வைக்கும் பொறிக்கேள்வி ஆகிறது. எதிரிகளிடையே பிளவு உண்டு பண்ண எண்ணும் சூழ்ச்சிக் கேள்வி இது என்பது தெளிவு. ஏனென்றால் கேள்வியின் நோக்கம் விடையையோ விளக்கத்தையோ எதிர்பார்த்ததல்ல. கேள்வி கேட்பதன் மூலமே ஒரு பிரசாரம் செய்து, தன் அறிவில் உள்ள குழப்பத்தை எதிர்தரப்பாரின் உள்ளத்திலும் மெள்ள உணர்ச்சி வழியாகப் புகுத்துவதே இத்தகைய கேள்விகளின் நோக்கமாக அமைகிறது.

## குட்டையைக் குழப்பும் முறை

குட்டையைக் குழப்பும் இதே முறையை இருவேறு அறிஞர்-இருவேறு கூடாரத்திலிருந்து கொண்டு-இருவேறு கொள்கைகளுடன் சிலப்பதிகாரத்தின்மீது செலுத்தி இருமுகப்பட்ட தாக்குதல்களால்-சிலப்பதிகாரத்திற்கல்ல-தமிழுக்கே ஊறு விளைவிக்க முனைகின்றனர்.

இரண்டு பாணங்களும் அறிஞர் உலகை அசைக்கவில்லை - இதை அவர்கள் அறிவர். புலவர் உலகம் அவற்றைப் புறக்கணிக்கிறது-இது கண்டு அவர்கள் ஒரு சிறிதே புழுங்குகின்றனர். ஏனென்றால் எதிர்ப்பு அவர்களுக்கு ஓரளவு விளம்பரம் கொடுத்திருக்கும். ஆயினும் அவர்கள் தலையான நோக்கம் அறிஞர்களையோ புலவர்களையோ எதிர்ப்பதல்ல. அவர்கள் ஆராய்ச்சி விளக்கத்தை எதிர்பார்ப்பதுமல்ல. அவர்கள் குறிக்கோள் பொதுமக்கள் உள்ளத்தில் சிலப்பதிகாரத்துக்கு ஏற்பட்டுவரும் சிறப்பை ஒரு சிறிதேனும் குறைப்பதே. இதற்கு என்ன காரணம் என்பதைப் பொதுமக்கள் இன்று அறியமாட்டார்கள்-அறிஞர்கள் புலவர்கள்கூட முழுதும் கண்டுகொள்ளமுடியாது. சிலப்பதிகாரம்மூலம் அனைத்திந்திய அரங்கிலும் உலக அரங்கிலும் தமிழுக்கு ஓரளவு ஏற்பட்டுள்ள-அல்லது விரைவில் ஏற்பட இருக்கிறபெருமையைக் குறைப்பதே அவர்கள் நோக்கமாகும்.

இதனினும் ஆழ்ந்த ஒரு நோக்கம் இந்த மாய எதிர்ப்புக்கு உண்டு. தமிழ்மொழி ஆரியத்தால் அமிழ்த்தப்பட்டு, உலக அரங்கில் இடம் பெறாமல், அனைத்திந்திய அரங்கில் புறக்கணிக்கப்பட்டு இருட்டடிக்கப்பட்டு வருகிறது. தொல்காப்பியம் திருக்குறள் ஆகியவற்றோடு சிலப்பதிகாரமும் சேர்ந்து இந்நிலையை மாற்றி வருகிறது. இதை வெளிநாட்டுத் தொடர்புடைய அறிஞரே உணர்வர். அத்துடன் சிலப்பதிகாரம் தமிழின் பழைமையையும் பெருமையையும் வடமொழி தாண்டி உலக அரங்குக்குக்கொண்டு செல்லத் தக்கதாய் இருக்கிறது. தமிழுக்கு அந்நிலை ஏற்பட்டுவிட்டால் என்ன நேரும்? தமிழை மட்டுமன்றி, மற்ற கீழ்நாட்டுத் தாய்மொழிகளையும் வளர விடாமல் அடக்கி ஒடுக்கி ஆட்சிசெய்யும் ஆரிய மொழியின் ஆதிக்கம் இதனால் தளர்ந்துவிட வழியுண்டு. இதைத் தடுக்கவே மாய எதிர்ப்புகள் முனைந்துள்ளன.

எதிர்ப்புமூலம் தமிழ் எதிர்ப்பாளருக்கு நாம்விளம்பரம்கொடுக்க விரும்பவில்லை; ஆனாலும் அவர்களுக்குத் தரும் விளக்கமே பொதுமக்களுக்குச் சிலப்பதிகாரத்தின் அருமை பெருமைகளை எடுத்துக் காட்ட ஒரு நல்ல வாய்ப்பு என்று கருதுகிறோம். சிலப்பதிகாரத்தின் இலக்கியச் சிறப்புமட்டுமல்ல தமிழ்ப் பண்பாடு கலைப்பண்பு ஆகியவற்றின் வரலாற்றுக்கு அதுதரும் சிறப்பையும் அனைத்திந்திய, உலக அரங்குகளில் தமிழுக்கு அது அளிக்க இருக்கும் சிறப்பையும் விளக்க இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள விரும்புகிறோம்.

(தொடரும்)

## புதுவை வாழ்வோன்

(இராம. தண்டபாணி)

தென்புலத்து மூவேந்தர் மடிவளர்ந்த
தெள்ளுதமிழ் வள்ளுவனின் குறளுக்குப்பின்
கன்னல்நிகர் இனிமையென கவிபொழிந்த
கவியரசன் பாரதியின் குழுவில்பூத்த
புன்னகைக்கும் புரட்சிப்பூ புதுமைகாட்டும்
பொதுஉடைமைப் பூஞ்சோலை - திராவிடத்தின்
பொன்னான வாழ்விற்கு - விடுதலைக்கு
புதுக்கவிதை பாடியவன் புதுவைவாழ்வோன்!

எத்தனையோ ஆண்டுகட்கு முன்பேஇந்த
எழில்காட்டின் பழங்குடிகள் அடிமையாக
செத்தார்கள் - ஆனாலும் - முன்னேவந்து
சீர்திருத்தம் செய்வதற்கோ நாதியில்லை!
"அத்தனையும் நம்வேலை அழகுகாட்டின்
ஆர்வமிகு இளைஞர்களே விழித்தெழுங்கள்
புத்துலகம் ஒன்றமைப்போம் வாரீர்" என்று
புதுக்கவிதை பாடியவன் புதுவைவாழ்வோன்!

## அப்படியானால்!

◉

### சித்திரம் தீட்டப்போகிறார்களாம்!

காங்கிரசார், தாங்கள் நடத்திய தீரவீரப் போராட்டங்களை யெல்லாம் டில்லி பாராளுமன்றச் சுவர்களில் சித்திரங்களாகத் தீட்டி வைக்கப் போகிறார்களாம்!

போராட்ட நிகழ்ச்சிகள் இடம் பெறுமாம்!

47-நள்ளிரவில் சுதந்திரசாசனம் பெற்ற 'இராகுகாலமற்ற' நேரத்து நிகழ்ச்சியும் அங்கே படமாகத் தீட்டப்பட இருக்கிறதாம்!

செங்கோட்டையில் மூவர்ணக் கொடி ஏற்றிய கட்டம்தான் முக்கிய இடம் பெறுமாம்!

### அப்படியானால்!

திருப்பரங்குன்றத்திலே ஆச்சாரியார் கழுத்தை மூன்றும் பிறை (கல்தா) கவ்வியது; மொழிப் போராட்டத்திலே அவர் மூக்குடைபட்டது; தாளமுத்து, நடராசன் மனைவியரின் தாலிகளை அறுத்தது; நேத்தாஜி காங்கிரசுக்கு முழுக்குப் போட்டது; காங்கிரஸ் தலைவர் தேர்தலிலே நேதாஜியின் வெற்றியையும், பட்டாபியின் தோல்வியையும் கண்டு 'பட்டாபியின் தோல்வி என் தோல்வி' என காந்தியார் புலம்பி அழுதது; இந்த நிகழ்ச்சிகளெல்லாம் ஓவியங்களாகத் தீட்டப்படுமா?

வெண்பாப் போட்டி

அடுத்த இதழில்





கோ. சிந்தனைச்செல்வன்
பெங்களூர்

*பண்டைக்காலத்தில் சேர, சோழ, பாண்டியன்; இவர்கள் மூன்று அரசர்களும் ஒன்று சேர்ந்து வாழ்ந்த காலம் எது? இம்மூன்று அரசர்களும் ஒன்றாய் எப்படிக் கூடினார்கள்?*

சேர சோழ பாண்டியர்கள் தனித்தனித் தமிழ் அரசர்கள். பெரும்பாலும் ஒருவருடன் ஒருவர் போரிட்டும் வென்றுதான் வாழ்ந்தார்கள். இணங்கி இருந்த காலங்களும் உண்டு. சிறப்பாக மூவரும் ஒன்றாகக்கூடி இருந்த காட்சி ஒன்றை புறநானூற்றில் (367) ஔவையார் நமக்குத் தருகிறார். அச்சமயம் சோழன் பெருநற்கிள்ளி என்ற இராசசூயம் வேள்வி நடத்தினான். அதன்கண் சேரமான் மாரிவெண்கோவும் பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியும் விருந்தினராய் வந்து உடனிருந்தனர்.

◉

போ. அரங்கநாதன், அயன்புரம்.

*(அ) தென்றலாரே!*

*ஒரு மொழிக்குச் சிறப்புத் தருவது அந்த மொழியில் செய்யப்பட்ட காவிய நூல்களா அல்லது உரைநடை நூல்களா? காவிய நடைக்கும் உரை நடைக்கும் உள்ள பொதுவான வேற்றுமை என்ன?*

*(ஆ) நாட்டிலே சொல்லப்படும் 'கண்ணகி'யின் வரலாற்றிலே கண்ணகி கோவலனுடன் உறவு கொள்ளவில்லையென்றும் மணமான அன்றே கோவலன் கண்ணகியைப் பிரிந்துசென்றான் என்றும் சொல்கிறார்கள். ஆனால், அ. மு. பரமசிவானந்தம் அவர்கள்எழுதிய ஒரு நூலில் கண்ணகியும் கோவலனும் களவொழுக்கத்தில் ஈடுபட்டு சில மாதங்கள் இல்லற இன்பத்தை நன்கு அனுபவித்தார்கள் என்றும் அதன் பிறகே நாட்டியக் கலையின் மோகத்தால் கோவலன் மாதவியிடம் தொடர்பு கொண்டதாகச் சொல்லியுள்ளார். இதுபற்றி உங்கள் எண்ணம் என்ன? அவர் கூறுவது உண்மையாயின் ஆதாரம் காட்டி விளக்கம் தருக.*

(அ) காவியம் என்பது கவிதை நூல் மட்டுமல்ல. உரைநடையிலும் காவியம் உண்டு. மொழிக்குச் சிறப்புச் செய்பவை கவிதை, உரை நடை இரண்டும்தான். கவிதை பழமையைப் பேணும்; வருங்காலப் புதுமையையும் முன்சென்று ஆக்கும். உணர்ச்சியை இயக்கும்; கனவுகளைத் தூண்டி வாழ்வை ஆக்கும்.

உரைநடை வாழ்க்கையி உலவுவது, கவிதையின் சிறப்புக்கள் அத்தனையையும் நிகழ்காலத்தோடு பொருத்தி அந்நிகழ் காலத்தை வளர்த்து உருவாக்குவது.

கவிதையைவிட உரைநடையே இன்று உலக இலக்கியத்தில்பெரும்பகுதியாக வளர்ந்து வருகிறது. ஆயினும் கவிதையே நீடித்து நிலையாக நிற்கவல்லது என்று கூறலாம்.

கவிதைக்கும் உரைநடைக்கும் உள்ள முக்கிய வேற்றுமை; முன்னதில் உணர்ச்சி மிகுதி, வடிவழகுக்கு முதலிடம் தரப்படுகிறது. செறிவும் கூறாமல் கூறும் குறிப்பு அல்லது தொனிப்பண்பும் நல்ல கவிதையில் முதலிடம் பெறுகின்றன. தவிர கவிதை மொழியின் உயிர். உரை நடை அதன் உடல் எனலாம். மேலீடாகப் பார்ப்பவருக்கு கவிதைக்கு, அடி எதுகை, மோனை, சீர், தளை, ஆகிய வடிவ அமைப்புகளும், சொல்லணி, பொருள்அணி ஆகிய ஆடை அணிகலங்களும் உள்ளன. உரைநடை இப்பண்புகளைச் சிறிது குறைவாகக் கொண்டு வாழ்க்கையுடனும்பொது அறிவுடனும் காலநிலையுடனும் மிகுதி கலந்து இலக்கிய உடலுக்கு விரிவும் வளர்ச்சியும் தருகின்றது.

(ஆ) கண்ணகி கோவலனுடன் மணவாழ்வு நடத்திய செய்தி மனையறம்படுத்த காதையில் விரிவாகக் கூறப்படுகிறது. குறிப்பாக அவர்கள் நீடித்த இன்பத்தைக் கூறும் அடிகள் வருமாறு.

"உலவாக் கட்டுரை
பலபா ராட்டித்
தயங்கிணர்க் கோதை
தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன்
மகிழ்ந்துசெல் வுழிநாள்
வாரொலி கூந்தலைப்
பேரியற் கிழத்தி
மறப்பரும் கேண்மையோ
டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம்
பெருந்தண் வாழ்க்கையும்
வேறுபடு திருவின்
வீறுபெறக் காண
உரிமைச் சுற்றமோ
டொருதனி புணர்க்க
யாண்டுசில கழிந்தன
இற்பெருங் கிழமையிற்
காண்டகு சிறப்பிற்
கண்ணகி தனக்கென்"

◉

மு. வடிவேல், பழனி.

*கோளில் பொறியிற்
குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத்தலை.
இதன் பொருளை விளக்குக.*

மெய், வாய், கண், மூக்கு, செவி, என்ற ஐந்துபொறிகளுக்கும், சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், ஆகிய ஐந்து புலன்கள்-அதாவது குணங்கள் உண்டு. அந்தக் குணங்கள் இல்லாவிட்டால் அந்தப் பொறிகள் பயனற்றவையாகின்றன. அதுபோலவே பாதங்களை தலையின் குணம் கடவுளின் பாதங்களை வணங்குவது ஆகும். கடவுளின் பாதங்களை வணங்காதவன் தலையின் பண்பை இழந்தவனாகிறான். கடவுளுக்கு எட்டுக் குணங்கள் உண்டு. தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல் முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை. முடிவிலாற்றலுடைமை வரம்பிலின்பமுடைமை என இவை வகுத்துக் கூறப்பட்டுள்ளன. அவனை வழிபடுவோர் அவன் தாளாகிய இப் பண்புகளை தம் தலையாக அல்லது குறிக்கோளாகக் கொள்வார்கள். எண்குணத்தான் என்பது எட்டுக் குணங்களை உடையவன் என்று கூறுவதைவிட சிறப்பாகக் கருதப் படுகின்ற குணங்களை உடையவன் என்று கூறுவது பொருத்தமாகும். கடவுளின்பண்புகள்அளவிறந்தன; மனிதன்பண்பில் வளருந்தோறும் அவை பெருக்கமும் விளக்கமும் பெறுகின்றன. இடைக்காலத்தார் அதை எட்டுக் கூறுபடுத்தினர். பரிமேலழகர் தந்த கூறுபாடே மேலே தரப்படுகிறது.

◉

எஸ். மார்ட்டின், பாங்கிமலை.

*(அ) கிறித்துவ மதம் இந்த நாட்டில் யார் காலத்தில் யாரால் எந்த வருஷத்தில் புகுத்தப்பட்டது (முக்கியமாக திராவிடத்தில்)*

*(ஆ) திராவிடத்தை ஆண்டுவந்த முன்னோர்கள் எந்த மதத்தைத் தழுவி வந்தார்கள்?*

(அ) இன்றுகூட கிறித்துவ மதம் வடநாட்டைவிட தென்னாட்டிலேயே மிகுதி. அதிலும் சிறப்பாக தமிழகத்தின் தென்பகுதியிலும் மலையாள நாட்டின் தென்பகுதியிலுமே மிகுதியாகப் பரவிஉள்ளது. மேலை உலகுடன் கடல் தொடர்பு வடஇந்தியாவுக்கு வரலாற்றிலே இருந்ததில்லை. அக்கடல் தொடர்பு காரணமாகவே தெற்கே கிறித்துவ மதம் மிகுதி பரவி உள்ளது.

கிறித்துவ மதம் தென்னாட்டில் மிகுதி பரவியது, 15, 16-ம் நூற்றாண்டில் வந்த போர்ச்சுக்கீசியர் ஆட்சியிலும் அதன்பின் ஏற்பட்ட பிரிட்டிஷ் ஆட்சியிலுமே. ஆயினும் இதற்குமுன் இரண்டு அலைகளாகக் கிறித்துவ மதம் தென்னாட்டிற்கு வந்திருக்கக்கூடும் என்று நினைக்க இடம் உண்டு. முதல் அலை ஏசுபிரான் வாழ்ந்த காலத்திலேயே அவர் சீடர்களுள் ஒருவரான திருத்தகு தாமஸ்மூலம் தென்னிந்தியாவுக்குப் பரவிற்று. மலையாளக்கரை தமிழகக்கரை முழுவதும் சென்று சமயம் பரப்பி திருத்தகு தாமஸ் மயிலையில் சில காலம் தொண்டாற்றி இன்றைய பரங்கிமலையில் உயிர்நீத்ததாக அறிகிறோம். இதற்குப் பின்னும் சிரிய நாட் (Syria) டிலிருந்து யூதர்களும் சிரிய கிரித்துவர்களும் உரோமர் கொடுங்கோலாட்சியினின்று தப்பி ஓடி பல காலங்களில் மேல் கடற்கரையில் இறங்கி வாழ்ந்தனர். இவர்களே சிறிய கிரித்துவர்கள்என்று அழைக்கப்படுகின்றனர். உரோமன் கத்தோலிக்கர்களுக்குச் சமயத் திருமொழி இலத்தீனம். அதுபோல சிரியக் கிரித்துவர்களுக்குச் சமயத்திருமொழி சிரியக்கு மொழி. உரோமன் கத்தோலிக்கர்களுக்கு உரோம் நகரில் ஒரு உலகத் தந்தை இருப்பதுபோல இவர்களுக்கு சிரிய நாட்டின் பழைய தலைநகரான அண்டியாக்கில் (Antioch) ஒரு உலகத் தந்தை இருந்துவருகிறார். இந்தச் சிரியக் கிரித்துவர்கள் சேர அரசர்களால் பேணப்பட்டு மாப்பிள்ளைகள் என்ற மதிப்புப் பட்டம் அடைந்தனர். இன்றும் மாப்பிள்ளைக் கிரித்துவர்கள் என்று அவர்கள் அழைக்கப்படுகின்றனர்.

(ஆ) எல்லா மதங்களின் அடிப்படைப் பண்புகளும் பெரும்பாலும் திராவிடத்தின் பலபடியான பண்புகளைத் தழுவியே வளர்ந்துள்ளன. உலகிலுள்ள மத வேற்றுமைகளைவிட என்றுமே மத வேற்றுமைகள் கொள்கை வாதங்கள் திராவிடத்திலேயே மிகுதியாய் இருந்துள்ளன. இன்றும் கிட்டத்தட்ட எல்லா மதங்களும் இடம்பெறும் பகுதி திராவிடமே: திராவிட நாட்டில் தமிழ், கன்னட இலக்கியங்கள் கிட்டத்தட்ட எல்லா மதங்களுக்கும் கண்ணாடிபோல இயங்குகின்றன.

ஆயினும் உலகத்துக்கு மதங்களைக்கொடுத்த திராவிடம் அன்றும் இன்றும் தன்னளவில் இயற்கை மதத்திலேயே சார்ந்துள்ளது. சைவம் வைணவம் இரண்டும் மதங்களல்ல. திணைத்தெய்வமும் குலதெய்வமும் ஆன திருமால், திணைத்தெய்வமாகிய சிவன் ஆகிய இயற்கை வணக்கத்தின் விரிவுகளை அவற்றின் கொள்கைகள் தமிழர்களிடையே இயற்கையாக வளர்ந்த பல அறிவுக் கோட்பாடுகளையும் நம்பிக்கைகளையும் சேர்த்துக் கொண்டு மதங்களாக இயங்குகின்றன. மற்றபடி திராவிடர்க்கென்று தனி மதம் இல்லை. தனிப் பண்புதான் உண்டு. அந்தப் பண்பு எல்லா மதங்களையும் ஊடுருவி அவற்றைத் தாண்டி நிற்கிறது.

மலர்க்கோதை!

மங்கை நல்லாள்! மங்காத குண விளக்கு! மாசறு பொன்! மாணிக் கப்பதுமை! மின்னலின் வடிவம்! மாண்பின் திருவுருவம்!

ஆம். என் உள்ளத்தை அள்ளிச் சென்ற கோல நிலாதான் அவள்! அவள்முகம் அன்றலர்ந்த தாமரை, விழிகளைப் பறித்திடும் எழிற் பிழம்பு!

அச்சில் வார்த்தெடுத்த சிற்ப மல்லவா என் அகத்தினுள் ஏறி இன்பப் பண்பாடும் ஏந்திழை! பாகனே! தேரை விரைந்து செலுத்து. என் குன்றெடுக்கும் தோளில் சாய்ந்த அந்தக் கொய் யாக்கனியாளைக் காணவேண்டும். அவளுடைய இதழின்கடையில் சிந்தும் அழகின் சிறுகோட்டை நான் விரைவிலே கண்டு மகிழ வேண்டும். களிப்புக் கடலில் மூழ்கி மூழ்கி இன்பத்தின் முடியை எட்டவேண்டும்.

தங்கம் நிகர்த்தவள், 'சிங்கத் தின் நடையுடையவன், என்சிந்தை யிலே குடியேறியவன்! திங்களின் கண்களில் தித்திப்பான தூதுரை கள் அனுப்பியவன்! என்று வரு வானோ?'-என்று ஏங்கியிருப்பாள்; தேம்பியிருப்பாள்! தேரோட்டு வதில் திறம்பெற்ற பாகனே! வேக மாக ஓட்டிச்செல்!-என்றெல்லாம் பணிக்கிறான், பாவையின் பாகுச் சொற்களைப் பருகுவதற்குத் துடி யாய்த் துடிக்கும் அவள் பாசத்துக் குரியவன்!

★

எழிலரங்கை காணாத ஏக்கம் அவனுக்கு! ஆனால், அவன் அன் பின் உறைவிடமான அவளுக்கும் அப்படித்தான்! 'கார்காலத்தில் வருவேன்' என்றார். கார்காலமும் வந்துவிட்டதே! இன்னும் காதலர் ஏறிய தேர் மட்டும் வரவில்லையே, தோழி! என் இன்பக்களஞ்சியத்தை என்று காண்பேன்?

நான் அவரை அழைத்தால், "அழகின் அரங்கே! ஆனந்தச் சுரங்கமே! நான் கண்டெடுத்த கட்டாணிமுத்தே! என் உள்ளத் தைக் கொள்ளையிடும் மலர்க் கொத்தே! நீ எனக்கேற்ற இசைக் குயிலல்லவா! குயிலின் குரலில் என்னைக் கூவினால் கூடாது என்று சொல்லுவேன்-என்றெல்லாம்அவர் உதட்டில் சதிராடும் சொல் அமுதை என்று சுவைப்பேன்?

கண்ணின் கடையில் விண்ணின் நிலவை வைத்து என் எண்ணத்தை இழுப்பாயே! வாயோரத்தில் சிரிப்பைத் தவழவிட்டு எனக்கு வைரத்தின் அருவியை நினைப்பூட்டு வாயே!-என்ற புனைந்துரையைக் கேட்டுப் பூரிக்கும்நாள் எந்நாளோ?

★

இவ்வாறு வருந்தும் சமயத்தில் கழுத்திலே பொன்வரிப் பெற்ற பச்சைக்கிளியைத் தன் மென்கரத் திலே ஏந்துவாள்! அதன் மழலை மொழிகளைக்கேட்டு மகிழவேண்டும்; அது தன் மனதுக்கு இசைந்த கருத்தை மொழியவேண்டும்; மணாளன் வரும் நாளை நவில வேண்டும்-என்று எண்ணியவாறு மொழி பயிற்றுவித்தாள் மலர்க் குழலி! "இன்று வருவாரென்று சொல்," என்பாள்! கிள்ளையின் மழலைச் சொல்கேட்ட கள்ளி நாணுற்று நிலைமறந்து நிற்பாள்!

பிரிந்தவர்கள் வருந்துகின்ற [illegible]தான் இது! ஒடிந்த உள்ளங் [illegible]ல் அல்ல, பிரிவால் நெகிழ்ந்த [illegible]சங்களால் துன்புறுகின்றவர் [illegible] நிலைதான் இது. இத்தகைய [illegible]களுக்கெல்லாம் தாயகம் [illegible]இடைத் துலங்கிய காதல் [illegible] காதல் நட்புதான்! [illegible]தில் கற்கண்டு பேச்சு [illegible]காண்டு, 'சிந்தா மல் சிதறாமல் அழகையெல்லாம் சேகரித்து குளிரேற்றி, ஒளியும் ஊட்டி இந்தாவென்றே இயற்கை அன்னை எனக்களிக்கும் எழிலோ வியமே! கொள்ளைச் சுகமளிக்கும் தென்றலே!' என்ற தேன் சொற் களையெல்லாம் உண்டு உண்டு பிரி கின்ற தன்மை பெற்றதல்ல அவர் கள் நட்பு!

பரந்த இவ்வையகத்தைக் காட் டிலும் விரிந்தது! வானைவிட உயர்ந்தது! கடலையும் ஆழத்தில் கடந்தது! பண்டைத் தமிழகத்துப் பண்பாட்டில் முகிழ்த்தெழுகின்ற நட்பின் சிறப்பைத்தான் பகர் கிறேன்; கேளுங்கள்!

**"நிலத்தினும் பெரிதே**
**வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர்அளவு**
**இன்றே சாரல்**
**கருங்கோல் குறிஞ்சிப்**
**பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும்**
**நாடனொடு நட்பே."**

குறுந்தொகை—3

[குறிப்புரை:—நீர்: இங்கே கடல்; ஆர்அளவின்று: அளத்தற்கரிய அளவினை உடையது. சாரல்: மலைப் பக்கம்.]

ஆம். மலைச்சரிவில்தான் கருநிற மான கொம்புகளைக் கொண்ட குறிஞ்சி மரங்கள்-அவைகளினூடே தேனூறும் மலர்கள் - அங்கே தேனுண்டு வாழும் ரீங்கார வண்டு கள்-இத்தகைய வனப்பின் வாழ் விடத்தை உடையவன்தான் அவள் அன்புக்குரியவன்; ஆசையின் பொற் சித்திரம்! அவன் மேல்கொண்ட நட்பைத்தான் கவிஞர் கூறியிருக் கிறார் மேலேயுள்ள பாட்டில்! இப்படிப்பட்ட நட்புடையவர்கள் பிரிந்து வாழும் நிலையேற்படவே வருந்தினார்கள்!

ஆயினும், துன்பத்தால் துவண்ட காதலர்களிடை இன்பம் துழாவித் துள்ளி எழுகின்ற நாள் நெருங்கி விட்டது!

ஒருநாள்..............!

கண்டார்கள், கரைபுரண்டோடும் காதல் வெள்ளத்தைக் கருத்துக் கரைகளால் கட்டிக்காத்த தீரர்கள்! பிரிந்தது போதும்; இனி வாழ் வோம்! பேசியது போதும்; இனி ஆசைமடுவில் அன்புத் தோணி யிலேறி ஆனந்தம் துய்ப்போம் என இருவரும் ஒப்பினர்! விரைவில் மணவினை முடித்தனர்! 'நன்று சூழ்க' என்னும் நல்லாசி பெற்ற னர் பல்லோரிடமிருந்து!

ஆண்டுகள் மூன்று கடந்து விட்டன! அவர்களின் ஆனந்தக் கூத்தில் அரைநொடியாகத்தான் தென்பட்டது அது! பழம் நிகர்த்த பாலகன் ஒருவன் குழல்மொழியால் அவர்களின் பரவசத்திற்கு எல்லை கட்டவில்லை! ஆம். அவன்தான் அவர்களின் காதலில் முகிழ்த்த சுவைத் தமிழ்க்கொழுந்து! எங்குமே இன்பத்தின் கோலம்; மங்கலச் செய்திகளின் இசைமுழக் கம்!

மலர்க்கோதையின் இல்லறத் தின் பாங்கறிய விரும்பினார்கள், அவளின் தாய்வீட்டார்! தன் பெண்ணைப் பார்த்துவர பேராவல் பெற்றாள், பெற்றவள்!

ஆயின், மலர்க்கோதையை வளர்த்த செவிலித்தாய் 'நான் சென்று பார்த்து வருகிறேன்' என்று அடங்கா விழைவினால் அறி வித்துவிட்டாள்! அவ்வாறே சென் றாள்! மாலை ஐந்து மணிக்கு மலர்க்கோதையின் வீட்டையும் அடைந்துவிட்டாள்!

அங்கே அவள் கண்டாள்!

அங்கே அவள் கண்ட அந்தக் காட்சி கவின்பெறு காட்சி!

முற்றத்திலே மலர்த்தோட்டம். அங்கே ஓர் அகலமான மேடை. மேடையின் ஒரு கோடியில் ஒரு கொடிப்பந்தர்! முல்லைக்கொடிகள் அப்பந்தரில் பின்னிப் படர்ந்திருக் கும் அழகோடு நறுமணத்தையும் அள்ளி வீசிக்கொண்டிருக்கிறது. அங்கே யாழை மீட்டி இன்னிசை எழுப்புகிறான், பாணன் ஒருவன்! சுருங்கச் சொன்னால் அது இன்பத் தின் இருப்பிடம்தான்!

மலர்க்கோதையின் கணவன் அம் மேடையிலே அமர்ந்திருக்கிறான். மலர்ந்த முகத்தோடு, முறுவல் தவழும் கோலத்திலே! மலருடல் மகன் மருங்கே நிற்கக் கண்டான்! தன் மடிமீது எடுத்து அமர்த்திக் கொண்டான்!

அப்பொழுதுதான், அக்குழந்தை யின் இதழ் கிழித்து வெளிக்கிளம் பியது சின்னஞ்சிறு சிரிப்பு!

சிரிப்பைப் பார்த்தாள், அவர் களைக் காணச்சென்ற செவிலித் தாய்! சிந்தை குளிர்ந்தாள்; செய்வதறியாத சிலையானாள்!

மடியிலே மகன் வீற்றிருக்கிறான். மனதிலே பாணன் இளப்பும் இன்னிசையின் சுவைவிருந்துஊறு கிறது! அப்போது தனயனின் தளிர் கரங்களின் தங்க விரல்களைத் தன் இரு கைகளால் பிடித்து யாழின் பாட்டுக்கு ஏற்றபடி தாளம் கொட்டு மாறு செய்து மகிழ்ந்த காட்சி கன்னல் தமிழ்தரும் சுவையையும் மிஞ்சியது!

மறுபுறம் மலர்க்கோதையும் ஒரு மேடையில் அமர்ந்திருக்கிறாள்! பக்கத்தே பூவையர் பலர் முல்லை யின் பூக்களைப் பறித்துத் தருகின்ற னர். நாறெடுத்து நறுமலரைத் தொடுப்பாளின் விரல் வளைவில், அழகு நாடகம் புரிந்ததைக் கண் டான், இன்பக்குன்று ஏறியிருந்த அவள் கணவன்! மலர்க்கோதை மலர்களை மாலையாக்கினாள்! தொடுத்த மாலையை எடுத்து மகன் தலையில் சூட்டினாள் மாதரசி! மற்றொரு தொடுப்பைத் தன் கரு முகில் கூந்தலில் பிறைத்திங்கள் வடிவில் வளைத்து வைத்துக்கொண் டாள், வனப்பு கொழிக்கும் வள முடையாள்! அதைச் சூழ்ந்திருந்த தோழியர்கள் திருத்திப் புதுப் பொலிவூட்டினர் மலர்க்கோதை யின் முகத்துக்கு! பார்த்தான் அவன்! இருவிழிகளை இன்பத்திரைப் போர்த்தி மறைக்கும்வரை பார்த் தான்!

இதையும் கண்டாள் செவிலித் தாய்! இதயங்களிக்க இன்ப வீட்டி னுள்ளே நுழைந்தாள்! புன்சிரிப் போடு வரவேற்றனர்! பூரித்துப் போனாள் செவிலித்தாய்! தான் அங்கு கண்ட காட்சியை அகத் திரையில் ஓவியமாக்கிக்கொண் டாள்!

சிலநாட்கள் சென்றன. செவிலித் தாய் ஊருக்குச் செல்லுவதாகத் தெரிவித்தாள், மலர்க்கோதையின் இல்லத்தை விட்டுப் பிரிந்துசெல்ல மனமில்லாது!

சென்றவள் இன்று வரமாட் டாளா என்று பாட்டையிலே பார் வையைப் பாய்ச்சி நின்றாள், மலர்க் கோதையின் தாய்! செவிலியும் சென்றுவிட்டாள்!

வரவுக்காக காத்திருந்தவள் வந்துவிட்டாள். புன்னகை தளும்பத் தளும்ப நலங்கேட்டாள் மலர்க்கோதையின் அன்னை! அடங் காத ஆர்வம் ஒடுங்கியிருந்த உள்ளப் பெட்டகத்தைத் தாண்டி வெளிக்கிளம்பியது, மகளின் வாழ்க்கையின் மகிமைகளைக் கேட் கும் வேட்கையோடு! கேட்டுவிட் டாள்!

அப்பொழுதுதான் செவிலித் தாயின் சிந்தனையிலே அன்று கண்ட அந்தக் காட்சியின் ஓவியம் களிநடம்புரிய ஆரம்பஞ்செய்தது! கவின்பெறு காட்சியை-கருத்தில் தேனமுது பாய்ச்சிய காட்சியைக் கூறுவாள் அவள்!

நான் கண்ட காட்சியை எப்படிக் கூறுவேன்? அவர்கள் நுகர்ந்த இன்பத்தை வெளிப்படுத்துவதற்கு உரிய சொற்களை அமைக்கும் அரு கதை எனக்கு இல்லையம்மா என்ற முன்னுரை கூறியிருப்பாள், அக் கோதை! பாணன் ஒருவன் பண் பாட, பளிங்குப் பதுமையான நம் மரும்பாவை ஒளிவிடும் அணிகலன் களை அணிந்திருக்க, பனைத்தோ ளாள், தொடுத்த மலரைத் தன்குழ லில் சூடி குதூகலிக்க, பண்பின் பெட்டகமான அப்பெருந்தகை தன் பச்சிளங்குழவியைத் தன் மடிமீது அமர்த்தி பெருகுகின்ற மகிழ்ச்சிக் குழம்பைப் பருகிக்கொண்டிருக்கும் காட்சியை நான் மறப்பேனோ? அன்றி உங்களிடம் கூறாது மறைப் பேனோ?

தான்கொண்ட அந்தக் காட்சி யைக் கூறிவிட்டாள்! அன்று அவ்வீடு முழுவதும் அதுவே பேச்சு! அந்தக் காட்சியின் படப்பிடிப்பைப் பாவ லரின் நடையிலே பாருங்கள்:

**"பாணர் முல்லை பாடச் சுடரிழை**
**வாணுதல் அரிவை முல்லை மலைய**
**இனிதிருந்தனனே நெடுந்தகை**
**துனிதீர் கொள்கைத்**
**தன் புதல்வனொடு பொலிந்தே."**

ஐங்குறு நூறு; 408

[குறிப்புரை:-வாணுதல்: ஒளி பொருந்திய நெற்றி. அரிவை; பெண். இனிது: மகிழ்வாய். நெடுந் தகை: பெருந்தகையோன். துனி: வருத்தம். கொள்கை: இயல்பு;]

ஆம். மலர்க்கோதையின் வீடு மலர்க்காடுதான்! அவ்வீட்டாரும் விருந்தினரும் பாடும் களிவண்டு கள்தான்! பார்க்கத்தகும் காட்சி தான் அது! நாம் மட்டும் என்ன? இக்காட்சிக்குரியவராக மாட் டோமா? ஆகமாட்டோம் என்பதே நம் அகராதியிலே இல்லாத சொல் லாயிற்றே! பண்டைத்தமிழரின் வாழ்வியல் கண்டறிந்த நாம் அவ் வாறே இல்லறத்தை அமைத்துக் கொள்வோம்; இமைப் பொழுதும் வீணாக்காது இன்பப் பண்ணிசைப் போம்! இனிது வாழ்வோம்!

—ஜி. பத்மநாபன் பி. ஏ.

